# நூல் முகம்



இந் நூல் இந்திய விடுதலையின் முதல் ஆண்டு நிறைந்து அடுத்த ஆண்டுத் தொடக்க நாள் ஆகிய இன்று வெளிவருகின்றது. திருநாவுக்கரசு அடிகள், மாணிக்க வாசக சுவாமிகள், சேக்கிழார் அடிகள், சுப்பிரமணிய பாரதியார், புகழேந்திப் புலவர், இளங்கோவடிகள், பரஞ்சோதி மாமுனிவர், வள்ளுவர் பெருமான், கவிச் சக்கிரவர்த்தி கம்பர், வில்லிபுத்தூர் ஆழ்வார், ஆண்டாள் நாச்சியார், அழகர் கலம்பக ஆசிரியர் ஆகிய பன்னிரு புலவர்களின் சொல் தொடர்களைப் பெரிதும் கொண்டு அமைக்கப் பெற்ற பன்னிரு கட்டுரைகளையும் இரண்டு நிகழ்ச்சிக் கட்டுரைகளையும் கொண்ட தொகுப்பு இச் சிறு நூல்.

இலக்கியத் தொடர்பு உடைய இக்கட்டுரைகளைச் சுருக்கமாக எளிய நடையில் எழுதியிருப்பதாக என் எண்ணம். இக்கட்டுரைகள் பத்திரிகைகளில் வெளிவந்தவை. இவைகளுள் கால நிகழ்ச்சி முதலிய கருதிச் சில மாறுதல் மட்டும் செய்திருக்கின்றேன். நூலின் முதல் கட்டுரையின் பெயர் நூலுக்கு இடப்பட்டிருக்கிறது.

கட்டுரைகளின் தராதரத்தைப் படிப்போர் முடிவு செய்க!

வெல்க தமிழ்!

அமராவதிபுதூர்<br>காந்தி ஆண்டு<br>௭௯ ௵ ஆடி ௴ ௩௧ ௳.

ராய. சொ.

## இந்திய விடுதலை நாளன்று
## ராய. சொ. பாடியது.

---

பாண்டவர்கள் அரசாண்ட டில்லிநகர்
தனில்இன்று பாரதத்தாய்
நீண்டபுகழ் அரியணையில் முடிசூடிக்
கோல்ஓச்சி மேவி தாங்கிக்
காண்தகுசீர் ஜவகர்லால் வல்லபாய்
ராஜேந்த்ரர் காத்து நிற்ப
ஆண்டுஉயர்தல் கண்டிட்டோம் கண்படைத்த
பயன்இன்றே அடைந்திட்டோமே.

## உள் உறை

| தொடர் எண் | பொருள் | பக்க எண் |
|---|---|---|
| க. | "நாம் ஆர்க்கும் குடியல்லோம்" - நாவுக்கரசர் | க |
| உ. | "மன்னரோடு உறவும் அஞ்சேன்" - மணிவாசகர் | ரு |
| ங. | "அருமந்த அரசாட்சி" - சேக்கிழார் | கo |
| ச. | குடியரசுக்கொள்கை - பாரதி | கரு |
| ரு. | "மற்றொருவன் ஆள்கின்றான்" - புகழேந்தி | கசு |
| சு. | "யானோ அரசன்?" - இளங்கோ | உங |
| எ. | "பெண்ணரசி" - பரஞ்சோதி | உஎ |
| அ. | நாடு எது? - வள்ளுவன் | ஙக |
| கூ. | "சொல்லினால் சொலக் கற்றிலம்யாம்" - கம்பன் | ஙரு |
| கo. | வீரன் வீட்டுமன் - வில்லி | ஙசு |
| கக. | மேகவிடு தூது - ஆண்டாள் | சரு |
| கஉ. | "ஆமர் வசல்" - அழகர் கலம்பகம் | ருo |
| கங. | "எம்மை ஆளுடை நாயகன் விருந்தினுக்கு இசைந்தான்" - விதுரன் கூற்று | ருரு |
| கச. | காரைக்குடியில் பாரதியார் ஓர் நிகழ்ச்சி | ருசு |

# நாம் ஆர்க்கும் குடியல்லோம்

நாம் ஆர்க்கும் குடியல்லோம் என்ற இந்த அரிய வாக்கியம் சுமார் ஆயிரத்து இருநூறு ஆண்டுகட்குமுன் நமது தமிழ் நாட்டில் தோன்றியது. இச்சொல் தொடரை அருளிய பெரியார், தமிழ்க் கடலை முழுதும் உண்டு சுவை கண்ட - பிறவிப் பெருங்கடல் நீந்திய - பிற சமயக் கடல் கடந்து சைவம் என்னும் தனிப் பெருங் கடலுள் மூழ்கிய - நடையறாப் பெருந் துறவி. இவ்வுலகத்தில் அப்பெருந்தகை எதற்கும் அஞ்சவில்லை; அவ் வடிகளை அஞ்ச வைக்கும் ஆற்றல் எச் சக்திக்கும் இல்லை.

> "அஞ்சுவது யாதொன்றுமில்லை;
> அஞ்ச வருவதும் இல்லை."

என்று அருளுகின்றார் அந் நாவின் வேந்தர்.

> "அச்சமில்லை! அச்சமில்லை!!
> அச்சம் என்பது இல்லையே!!!"

என்று பாரதியைப் பாட வைத்தவர் அவரே. பண்டைநாளில் அஞ்சாமைக்கு ஒரு எடுத்துக் காட்டாக விளங்கினார் அந்த வாகீச முனிவர். "துறவிக்கு வேந்தன் துரும்பு" என்பதை உலகு உணரக் காட்டினார் அம் மகான்.

அவர் காலத்திலிருந்த அரசனோடு அவருக்கு மாறுபாடு தோன்றிவிட்டது. புவியாளும் அரசர்கள் தங்கள் படை வலியாலும் பண வலி

யாலும் பிறவலியாலும் மமதையாலும் பெரிய வர்களை அவமதிப்பதை இன்று கண்ணாரக் காண்கின்றோமல்லவா? இப்படித்தான் அன்றும் இருந்தது. அன்றைய அரசனைத் திரணமாக மதித்தார் அன்பே வடிவமான நமது சொல்லரசர்.

'எமனுக்குக்கூட நாம் பயப்படமாட்டோம்! அரசன் எம்மாத்திரம்? காலனைக் காலால் உதைத்த கடவுள் நம்மிடம் இருக்கும்போது நமக்கும் அச்சத்திற்கும் என்ன தொடர்பு? "செந்தறுகண் வெள்ளெயிற்றுக் கரியகோலம் சிதைந்து உருள உதைத் தரு"ளிய செய்ய தாள்கள்நம்கைப்பிடியிலல்லவா இருக்கின்றன.

"நாமார்க்கும் குடியல்லோம்; நமனை அஞ்சோம்;
நரகத்தில் இடர்ப்படோம்; நடலை யல்லோம்;
ஏமாப்போம்; பிணியறியோம்; பணிவோம் அல்லோம்;
இன்பமே எந்நாளும்; துன்பம் இல்லை.
தாமார்க்கும் குடியல்லாத் தன்மை யான
சங்கரன்நற் சங்கவெண் குழையோர் காதில்
கோமாற்கே நாம்என்றும் மீளா ஆளாய்க்
கொய்மலர்ச்சே வடியிணையே குறுகினோமே."

என்று தலை நிமிர்ந்து இறுமாப்போடு கூறுகின்றார், தாழ்மையென்னும் ஆபரணத்தைச் சிறப்பாகத் தாங்கிய திருநாவுக்கரசடிகள். "நாமார்க்கும் குடியல்லோம் நமனையஞ்சோம்" என்றாரல்லவா நாவுக்கரசர்.

"யாமார்க்கும் குடியல்லோம் யாதும் அஞ்சோம்" என்று இயம்பினார், திருவாசகம் என்னும் தீம்

தேனைத் தமிழர் காதுகளில் பாய்ச்சிய மணி வாசகனார்.

"பூமியில் எவர்க்கும் இனி யடிமை செய்யோம் பரி
பூரணனுக்கே அடிமை செய்து வாழ்வோம்"

என்று கூறினர் இன்னோரன்ன பெரியாரைப் பின்பற்றிய நமது மகாகவி பாரதியார்.

"நாமார்க்கும் குடியல்லோம்" என்பதை யருளிய பெரியார், இடையறாப் பேரன்பினர்; அன்பு நீர் பொழி கண்ணினர்; நாயகன் சேவடி தைவரு சிந்தையர்; ஆனால் கொள்கையில் விடாப் பிடியினர்; வான் இடிந்து விழுந்தாலும் மலை புரண்டு வந்தாலும் அச்சம் என்பதை அறியாதவர். அவரை அழைத்து வருமாறு அன்றைய அரசன் ஆணை பிறந்தது. என்ன சொன்னார் அடிகள்! "அரசனாவது! அழைக்க வாவது! அவன் அழைப்பது! நாம் போவதா! நமக்கும் அரசனுக்கும் என்ன சம்பந்தம்!

"பாராண்டு பகடேறித் திரிவார் சொல்லும்
பணிகேட்கக் கடவோமோ பற்றற்றேமே"

'யானையில் ஏறிக்கொண்டு உலகத்தை யாண்டு திரிகின்றார்களே, அவர்கள் சொல்வதையா நாம் கேட்கவேண்டும்; நமக்கு அத்தகைய கடமையொன்றும் கிடையாது; உலகப்பற்று அற்ற நமக்கு அரசனும் ஆண்டியும் ஒரே மாதிரி தான்.'

"துகிலுடுத்துப் பொன்பூண்டு திரிவார் சொல்லும்
சொற்கேட்கக் கடவோமோ துரிசற்றோமே"

'ஆடைகளை யணிந்துகொண்டு நகைகளை அள்ளிப் போட்டுக்கொண்டு திரிகிறார்களே அவர்கள் சொல்வதைக் கேட்கவேண்டிய அவசியம் குற்றமற்ற நமக்கில்லை.'

"என்றும் நாம் யாவர்க்கும் இடைவோ மல்லோம்;
இருநிலத்தில் எமக்கெதிரா வாரும் இல்லை;
சென்றுநாம் சிறுதெய்வம் சேர்வோம் அல்லோம்;
சிவபெருமான் திருவடியே சேரப் பெற்றோம்;
ஒன்றினால் குறையுடையோம் அல்லோம்; அன்றே
உறுபிணியார் செறல் ஒழிந்திட்டோடிப்போனார்;
பொன்றினார் தலைமாலை அணிந்த வேணிப்
புண்ணியனை நண்ணியபுண் ணியத்துள்ளோமே"

என்று கூறி,

"நாமார்க்கும் குடியல்லோம்" என வீரமுழக்கம் செய்தவர் நாவுக்கரசர் பெருமான்.



# மன்னரோடு உறவும் அஞ்சேன்

இந்த அருமைச் சொல் தொடர் மணிவாசகனார் திருவாயினின்றும் பிறந்தது. உருகி உருகி இறைவனைப்பாடி இறைவனோடு ஒன்றிய பெரியார்—"தேனாய் இன்னமுதமுமாய்த் தித்திக்கும் சிவபெருமா"னைப் பருகிக் களித்தவர்—"வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே" என்று கூறி அழுது அடி அடைந்த அன்பர்—"நள்ளிருளில் நட்டம் பயின்றாடும்" "கண் சுமந்த நெற்றிக் கடவுளை"ப் "பண் சுமந்த பாட"லால் பரவிப்பணிந்த பண்பாளர்-கோவையார்கூறிக் காதல் துறையை வளர்த்த கண்ணாளர்-திருவாசகத் தீந்தேனைப் பொழிந்து தமிழ்ப் பயிரை வளம்படுத்திய சான்றோர்—வாதவூர் அடிகள் என்னும் மாணிக்க வாசகர், "மன்னரோடு உறவும் அஞ்சேன்" என்ற வாக்கியத்தையும் அருளினார். திருவாசக நூலில் அச்சப்பத்து என்று ஒரு பதிகம். பத்துப் பாடல்கள். உலகத்தாரை அச்சுறுத்துகின்ற பல பொருள்களைப் புகன்று அவற்றிற்கெல்லாம் அஞ்சமாட்டேன் என்கின்றார் அடிகள்.

"புற்றில் வாழ் அரவும் அஞ்சேன்"

புற்றிலே இருக்கின்ற பாம்புக்குப் பயப்படமாட்டேன்;

"வெருவரேன் வேட்கை வந்தால்"

ஆசைகளெல்லாம் திரண்டு வந்து அச் சுறுத்தினாலும், வெருவரேன்; பயப்படமாட் டேன்;

" வினைக் கடல் கொளினும் அஞ்சேன் "

வினைகள் கடல்போல வந்து என்னை ஆழ்த் தினாலும் பயப்படுதல் இல்லை;

" பிணியெலாம் வரினும் அஞ்சேன் "

நோய்கள் எல்லாம் ஒன்று கூடி வந்து உறுமினாலும் அச்சமில்லை;

" பிறப்பினோடு இறப்பும் அஞ்சேன் "

பிறப்பதற்கும், சாவதற்கும் கூடப்பய மில்லை;

" வாள்உலாம் எரியும் அஞ்சேன் "

ஒளி வீசுகின்ற நெருப்பு என்னை எரிக்க வரட்டும்! அப்பொழுதும் அச்சமில்லை;

" வரை புரண்டிடினும் அஞ்சேன் "

மலையே புரண்டு என்மேல் விழட்டுமே! அதற்கும் பயம் இல்லை;

" தறிசெறி களிறும் அஞ்சேன் "

கட்டுத்தறியை முறித்துக் கொண்டு மத யானையே என்மீது மோதவரட்டும்! நான் பயப் படமாட்டேன்;

" தழல்விழி உழுவை அஞ்சேன் "

தீயைக் கக்குகின்ற கண்களைக் கொண்ட புலி வந்து பாய்ந்தாலும் பயம் என்பதில்லை;

" கோணிலா வாளி அஞ்சேன் "

வளைந்த ஆயுதங்கள் வந்து உடலில் சொருகிக் கொள்ளட்டும்! அதனாலும் அச்சம் கொள்ளப் போவதில்லை;

" கூற்றுவன் சீற்றம் அஞ்சேன் "

எமனுடைய கோபத்துக்குக்கூட அஞ்ச மாட்டேன்;

" கிளியனார் கிளவி அஞ்சேன்
அவர்கிறி முறுவல் அஞ்சேன் "

கிளிபோன்ற மங்கையர் பேச்சுக்குப் பயப் படமாட்டேன்; அவர்தம் வஞ்சகச் சிரிப்புக்கும் அஞ்சமாட்டேன்;

" வன்புலால் வேலும் அஞ்சேன் "

புலால் படிந்த வலிய வேலாயுதம் பாய்ந்தாலும் பயமில்லை;

வளைக்கையார் கடைக்கண் அஞ்சேன் "

பெண்களுடைய பொல்லாத கடைக் கண்ணுக்குக்கூட நான் பயப்படமாட்டேன்.

மணிவாசகனாரின் இக்கருத்தை மனத்தில் வைத்து,

" கச்சணிந்த கொங்கைமாதர்
கண்கள் வீசு போதினும்
அச்சமில்லை! அச்சமில்லை!
அச்சம் என்பதுஇல்லையே! "

என்றார் பாரதியார்.

"மஞ்சு உலாம் உருமும் அஞ்சேன்"
என்பது மணிவாசகம்.

"உச்சிமீது வான் இடிந்து
வீழுகின்ற போதினும்
அச்சமில்லை! அச்சமில்லை!
அச்சம் என்பது இல்லையே!"

என்பது பாரதி வாசகம். இரண்டின் கருத்தும் ஒன்றே. இங்கு சொல்லப்பட்ட இவ்வளவுக்கும் அஞ்சாத வீரர் மாணிக்க வாசகனர், சில பொருள்களைக் கண்டால் அஞ்சுவேன் எனக் கூறுவது, பொருள் பொதிந்தது. இறைவனிடத்து அன்பு இல்லாதவர் — உயிர்களிடத்து அருள் இலாதவர் — அறிவிலாதவர் — அகம்நெகாதவர், இத்தகையவரைக் கண்டால் வாதவூராருக்கு மிகவும் பயம்.

இக் கட்டுரையில் சிறப்பாக எடுத்துக் கொண்ட பகுதி, மன்னவரோடுஉறவுகொள்ள அஞ்சமாட்டேன் என்று சொல்வதிலிருந்து அரசரோடு உறவாடுதல் அஞ்சத்தக்க ஒன்று என ஏற்படுகிறதல்லவா? ஆம்! அரசர் உறவு அஞ்சத்தக்கதுதான்.

"ஆற்றங்கரையின் மரமும்
அரசு அறிய வீற்றிருந்த
வாழ்வும் விழும் அன்றே"

என்று வேறொருவரும் விளம்பினர்.

அரசன் அறிய வீற்றிருந்த வாழ்வு நீண்டு நில்லாது பட்டு ஒழியும்; அதுபோல ஆற்றங்

கரையில் நிற்கும் மரமும் நீண்ட காலம் நில்லாது; நீர் அரித்து அரித்து வேரைப் பறித்து மரத்தை வீழ்த்திவிடும். இதைப்பற்றி மணிவாசகனும் திருவாசகத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.

"கார் உரு கண்ணியர் ஐம்புலன்
ஆற்றங்கரை மரமாய்
வேர் உறுவேனை விடுதிகண்டாய்"

என்பது அப்பகுதி. கருமைகொண்ட கண்ணையுடைய நங்கையர்களின் ஐம்புலனாகிய ஆற்றங்கரையிலே வேர்விட்டு நிற்கின்ற மரம் போன்றதுவாழ்வு! அவர் ஐம்புலனாகிய ஆற்று நீர் மரத்தின் வேரைப் பிடுங்கி மரத்தை வீழ்த்திவிடும் என அஞ்சுகின்றார் அடிகள். அதனை ஒத்ததே மன்னர் உறவும்.

மன்னரோடு நெருங்கி உறவாடியவர் வாதவூரடிகள். ஆதல்பற்றியே மன்னரின் உறவு பயங்கரமானது; அது அபாயகரமானது என்பதை நன்கு உணர்ந்து, புற்றில் வாழ் அரவு, வன்புலால் வேல், தறிசெறிகளிறு, தழல் விழி உழுவை, மஞ்சுலாம் உருமு முதலியவற்றோடு சேர்த்து "மன்னரோடு உறவும் அஞ்சேன்" என்று கூறினார் மாணிக்க வாசகர்.



# அருமந்த அரசாட்சி

அரும்—மருந்து—அன்ன என்ற மூன்று சொற்கள் சேர்ந்து அருமந்த என்று ஆயது. அருமையான தேவாமிர்தத்தை ஒத்த என்பது அச் சொற்றொடரின் பொருள். அத்தகைய அரசாட்சி எளிமையுடையது அல்ல; அது அருமை வாய்ந்தது என்று கூறுகின்றார், "பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய கவி வலவ"ராகிய சேக்கிழாரடிகள்.

மனுச் சோழ மன்னன் கதையைப் பலர் அறிந்திருக்கலாம். பயங்கரமான நீதிக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டு அக்கதை. மனுமுறை கண்ட சோழன் அல்லது மனுச் சோழன் என்ற பெயரையுடைய ஒரு மன்னன் சிம்மாசன மேறி அரசாண்ட ஊர் திருவாரூரில். அவனுக்கு ஒரு மகன்; தன் குலத்துக்கே ஒரேயொரு மகன். அவன் விஷயத்தில் தந்தை மனுச்சோழன் செலுத்திய நீதி பலருக்கு நினைக்கவும் முடியாதது.

அரசிளங்குமரன் திருவாரூர் வீதியிலே ஓர் நாள் தேரை ஓட்டிக்கொண்டு சென்றான். ஒரு கன்றுக்குட்டி தேர்ச் சக்கரத்தில் அகப்பட்டு மடிந்துவிட்டது. என்ன செய்தான் இளவரசன்? நமக்கென்ன என்று அவன் பாட்டுக்கு ஓடினனா? எத்தனையோ உயிர்களைக் கொன்றுவிட்டு மோட்டார்க் காரை விரைவாக

ஓட்டிச் சென்று ஒளிவோர் பலரைக் காண்கின்றோம். மனுச்சோழ மன்னனுக்குப் பிறந்த மகன் அப்படிச் செய்வானா?

உடனே தேரை நிறுத்திக் குதித்தான் கீழே; கன்றை இழந்த பசு கதறுவதைக் கண்டான்; அவனால் துக்கத்தைத் தாங்க முடியவில்லை. "அலறு பேராவை நோக்கி ஆருயிர் பதைத்துச் சோரும்" கத்துகின்ற பசுவைப் பார்த்து உயிர் பதைத்துக் கீழேவிழுகின்றான்;

"நிலமிசைக் கன்றை நோக்கி நெடிதுயிர்த்து இரங்கா நிற்கும்" மண்ணில் இறந்து கிடக்கிற கன்றைப் பார்க்கின்றான்; மூச்சுவிடுகின்றான்; எல்லையில்லா வருத்தத்தை அடைகின்றான்; தன் செய்கையை நினைத்து உருகுகின்றான். தனக்காக அவன் கவலைப்படவில்லை. மனுவேந்தனின் சீரிய செங்கோல் மைந்தன் நினைவுக்கு வருகிறது. 'ஆ மனுமுறை கண்ட மன்னனாகிய எந்தைக்கு இப்படியொரு பழியை உண்டாக்கவா நான் பிறந்தேன்?'

"மலர்தலை உலகம் காக்கும் மனுவெனும் எங்கோமானுக்கு உலகில் இப்பழி வந்தெய்தப் பிறந்தவா ஒருவன்" என்று அவன் கரைந்துருகும் செய்கை கல்லையும் கரைக்க வல்லது.

மைந்தன் நிலை இவ்வாறாக, தந்தை இந்நிகழ்ச்சியை அறிகின்றான். அரண்மனை வாயிலில் கட்டப்பட்ட மணி அடிபட்டது. அவ்

ஓசை, மைந்தன் உயிரைக் கவர வரும் எமனுடைய வாகனமாகிய எருமைக் கடாவின் கழுத்தில் அணிந்த மணியொலிபோல் மன்னன் காதுகளைத் துளைத்தது.

'என்ன இது? மணி அடிபடக் காரணம் என்ன?' என்று மந்திரிகளைக் கேட்டான் அரசன். ஒன்றுமில்லை; ஒரு பசு வந்து தன் கொம்பினுல் மணியடித்தது.

> "ஈங்கிதோர் பசுவந்தெய்தி
> இறைவ! நின் கொற்றவாயில்
> தூங்கிய மணியைக்
> கோட்டால் துளக்கியது"

என்று சாவதானமாகச் சாற்றினர் அமைச்சர். அரசனுக்கு அவர் போக்குப் பிடிக்கவில்லை. விசாரித்து உண்மையை அறிந்துகொண்டான். இதற்குப் பிராயச்சித்தம் என்ன என்று அறிஞர்களை ஆராய்ந்தான்; அன்னுர் என்னென்னவோ சொல்லினர். ஒன்றும் மன்னவன் மனத்திற்குப் பிடிக்கவில்லை.

கொன்றவனுக்குக் கொலைத் தண்டனை விதிக்க வேண்டுவதே. 'கன்றை இழந்து வருந்தும் பசுவின் துயரை நான் அடைய வேண்டும். என் கன்றைப் பறிகொடுத்தாலன்றிப் பசு அடைந்த துக்கத்தை நான் காணமுடியாது' என்று துணிகின்றுன் மனுச்சோழன். உலகில் எந்தத் தந்தைக்கும் ஏற்படாத துணிவு

மனுவேந்தன் புகழை வானளவும் உயரச் செய்துவிட்டது.

"வாயிற் கடைமணி நடுநா நடுங்க
ஆவின் கடைமணி உகுநீர் நெஞ்சுசுட
அரும்பெறல் புதல்வனை
ஆழியின் மடித்தோன்"

என்று சிலப்பதிகார ஆசிரியர் இளங்கோ வடிகள் எக்களிப்போடு மனுவேந்தன் புகழ் பாடுகின்ருர். கன்றைக் கொன்றதற்கு மகனைக் கொல்வது மூடத்தனமல்லவா என்று கூறலாகாது. மன்னவன் உள்ளம், தன் ஒரே அருமை மகனையும், ஒரு கன்றுக் குட்டியையும் வேறுபாடுகருதாது நோக்கிய சிறப்பு ஆராய்ச்சிக் குரியது. அருமையான அரசாட்சியை ஒரு மன்னன் செய்யவேண்டுமானல் அது எவ்வளவு கடுமையானது என்பதை மனுச்சோழ மன்னன் கதை மூலமாகச் சேக்கிழார் செப்புகின்ருர்.

'ஒரே மகன் தன் குலத்துக்கே என்பதை உணர்ந்தானல்லன்; தருமத்தின்வழி நடத்தலே தன் கடமை என நினைந்து தன் மகனைக் கீழே கிடத்தித் தன் தேர்ச் சக்கரங்களைத் தானே செலுத்தி மகனைக் கொன்ருன் மனு மன்னன்; அருமையான அரசாட்சி என்பது எளிதான காரியமா?' என்று கேட்கின்றது. பின்வரும் பெரிய புராணப் பாட்டு.

" ஒருமைந்தன் தன்குலத்துக்கு
உள்ளான்என் பதும்உணரான்
தருமந்தன் வழிச்செல்கை
கடனென்று தன்மைந்தன்
மருமந்தன் தேராழி
உறஊர்ந்தான் மநுவேந்தன்.
அருமந்த அரசாட்சி
அரிதோமற்று எளிதோதான். "



# குடியரசுக் கொள்கை

குடிமக்களால் தெரிந்தெடுக்கப்பெறும் அரசன் ஆளும் அரசு குடியரசு. குடிமக்களுக்குள் ஒருவன் அல்லது ஒருத்தி ஆளும் அரசு குடியரசு. அந்த அரசே அரசியல் எல்லாவற்றிலும் சிறந்த அரசு என்பது மேலோர் கொள்கை.

இன்று உலகத்திலேயே சிறந்த நாகரிகர் என்று தங்களைச் சொல்லிக்கொள்கிருர் ஆங்கிலேயர். அரசியலில் அவர் முற்போக்கு அடையவில்லை. பிறநாட்டையெல்லாம் கட்டியாளும் பேராசையில் அன்னுர்க்கு இணையில்லை யென்பதைத்தவிர, அவர்கள் சொந்த நாட்டிலேயே குடியரசுக் கொள்கை இன்னும் வரவில்லை.

பரம்பரையாக மன்னன் மகன் மன்னனுவது என்பது அநாகரிகம். வேந்தனுக்குரிய திறமையுள்ளவனே வேந்தனுக வேண்டும். ஆட்சிமுறை அறிந்தவன் அரசனுவதல்லவா முறை? மக்கள் விரும்பும் ஒருவன் மன்னனுவதன்றே சிறப்பு?

தையற்காரன் மகனுக இருக்கலாம் ஒருவன். அவனுக்குத் தைக்கத் தெரியவில்லையானுல் அவனிடம் துணியைக் கொடுப்பது அறிவுக்குப் பொருந்துமா? நன்ருகத் தையல்

வேலை தெரிந்தவனிடம் துணியைக் கொடுத்தா லல்லவா பொருள் உருப்படியாகும். அவன் பரம்பரைத் தையற்காரன் மகனாக இருக்க வேண்டிய அவசியம் என்ன? ஒவ்வொரு தொழிலும் இப்படியே.

மன்னர் ஆக வர தகுதியுடையோர்க் கெல்லாம் உரிமையுண்டு. அதனாலேயே "எல்லோரும் இந்நாட்டு மன்னர்" என்றார் கவி யரசர்.

ஏறக்குறைய ஆயிரம் ஆண்டுகட்கு முன் இருந்ததாகக் கருதப்படுகிற கவிச்சக்கிர வர்த்தி இக்குடியரசுக் கொள்கையை ஒரு வாறு ஆதரிக்கிறார். குடிமக்களின் விருப் பத்தை அறிந்தே இராமனுக்கு முடிசூட்டி அரசன் ஆக்கக் கருதினான் தசரதன் என்று புலவர் பெருமான் புகல்கின்றார்.

அரசன் என்றால் அவன் எதையும் செய்து விடலாம் என்று நினைக்கக்கூடாது. அரசனுக்குச் சில கடமைகள் உண்டு. அவற்றை அவன் சரியாகச் செய்யவில்லையா னால் அவன் பதவியில் நின்றும் வீழ்த்தத் தக்கவனே. அரசனுடைய உரிமையை மிகத் திறம்படச் சித்திரிக்கிறார் கவி பாரதியார்.

இரண்டு உதாரணங்கள். இரண்டும் இணை யில்லாத - விலை மதிக்க முடியாத மாணிக்கங் கள். ஒரு வீடு; அது நமக்குச் சொந்தமானது. அதனைக் காவல் செய்வதற்கு ஒரு ஆளை நாம்

ஏற்பாடு செய்தோம். அந்தக் காவலன் நமது வீட்டைப் பிறருக்குக் கொடுக்கலாமா? அதற்கு அவனுக்கு உரிமை உண்டா? அரச னுக்கும் காவலன் என்று பெயருண்டு. ஒரு வன் வீடு காவலன்; இன்னொருவன் நாடு காவ லன்; நாடு காவலனுகிய தருமன் நாட்டைவைத் துச் சூதாடித் தோற்றான். அது எதற்குச் சமம்?

"வாயில் காத்து நிற்போர் — வீட்டை
வைத்து இழத்தல் போலும்"

இது இருக்கட்டும். மற்றொன்றைப் பார்க் கலாம். பெரிய கோவில்கள் கட்டுகிறோம். நல்ல விலைகொடுத்து அழகிய சிற்பங்களை உருவாக்கி அக்கோவில்களிலே வைக்கிறோம். அவற்றை வழிபாடு செய்வதற்குப் பூசாரிகளை நியமிக்கிறோம். அந்த அர்ச்சகர்களின் உரி மை என்ன? சுவாமிக்குப் பூஜை செய்வது தானே? விக்கிரகங்களைக் கொண்டுபோய் அவர்கள் விற்றால் எப்படியிருக்கும்? அதற் கும் தருமன் நாட்டைச் சூதில் இழந்ததற்கும் என்ன வித்தியாசம்?

"கோவில் பூஜை செய்வோர்-சிலையைக்
கொண்டு விற்றல் போலும்"

இப்படித் தகாத காரியம் செய்தவன் யார்? சாதாரணமானவனா? இல்லை. எல்லாம் அறிந் தவன். தருமபுத்திரனே இவ்வாறு செய்தான். நிகரற்ற பொறுமை வாய்ந்தவன். நீதிகள் அனைத்தும் உணர்ந்தவன். வீரசூரர்களைத்

தம்பிகளாகப் பெற்றவன். வாழ்க்கையில் ஒரு குறைவும் இல்லாதவன்.

யாராய் இருந்தால் என்ன? அவன் செய்தது செய்யத் தகாத சிறிய செய்கை. "சீச்சீ! சிறிய செய்கை செய்தான்."

பாரதி இயற்றிய அரிய காவியமாகிய பாஞ்சாலி சபதத்தில் குடியரசுக் கொள்கையை ஆணித்தரமாக நிலைநாட்டும் கருத்துடைய ஒப்பற்ற உயரிய கவியின் உட்பொருள் இது. அந்தப்பாட்டைப் பருகி மகிழுங்கள்:

"கோவில் பூசை செய்வோர்—சிலையைக்
கொண்டு விற்றல் போலும்
வாயில் காத்து நிற்போர்—வீட்டை
வைத்தி ழத்தில் போலும்
ஆயிரங்க ளான—நீதி
அவையு ணர்ந்த தருமன்
தேயம் வைத்தி ழந்தான்—சிச்சி!
சிறிய செய்கை செய்தான்"



# மற்ருெருவன் ஆள்கின்ருன்

மற்ருெருவன் ஆட்சி எவ்வளவு கொடுமையாக இருக்கும் என்பதை நாம் பிறர் சொல்லித் தெரிந்துகொள்ள வேண்டாம். நமக்கு அதில் நீண்டகால அனுபவம்.

"மற்ருெருவன் ஆள்கின்ருன்" என்று சின்னஞ் சிறு குழந்தைகளும் கதறியழுத ஒரு பழைமை நிகழ்ச்சியை இங்கு நினைவுக்குக் கொண்டு வருவோம்.

நளச் சக்கரவர்த்தி என்று ஒருவன் இருந்தான். அவன் மிக உயர்ந்த நெறி வாய்ந்தவன் தான். ஆனாலும் தகாதகாரியம் ஒன்றை அவன் செய்து விட்டான். சூதாடி இராஜ்யத்தைத் தோற்றுவிட்டான். அதனால் நளன் தேசாந்திரம் புறப்பட நேர்ந்துவிட்டது.

அருமைக்காதல் மனையாள் தமயந்தி உடன் வருவதாகப் பிடிவாதம் செய்தாள். நளனால் மறுக்க முடியவில்லை. அழைத்துச் சென்ருன். இரவு வந்து விட்டது. தமயந்தி உறங்கிக் கொண்டிருந்தாள். நளனுக்குத் தூக்கம் வரவில்லை.

தனக்கே ஆதரவு இல்லாத நிலையில் அவளை அழைத்துச்செல்வதிலுள்ள கஷ்டத்தை உணர்ந்தான். அவளை விட்டுப் பிரிவது என முடிவு செய்தான். தமயந்தி உறங்கும்போது காட்டில் அவளை விட்டுவிட்டுப் புறப்பட்டான்.

துயிலுணர்ந்ததமயந்திகணவனைக்காணுது துயரத்தில் மூழ்கி, வேறு வழியின்றித் தந்தை வீடு சேர்ந்தாள். அங்கு விட்டுச்சென்ற தம் பிள்ளைகளோடு நாயகன் பிரிவுத் துன்பத்தால் வாட்டம் அடைந்திருந்தாள் தமயந்தி.

ஆண்டு பல கடந்தன. ஒரு நாள் சந்திப்பு நேர்கிறது. நளனுக்குத் தமயந்தியை நன்கு தெரிகிறது. நளன் மாறுவேடத்தோடு இருக்கிறுன். தமயந்திக்குச் சரியாகத் தெரியவில்லை. சந்தேகப்படுகின்றுள். அவனே தன்னைக் காட்டிக்கொள்ள வில்லை. சந்தேகம் தெளிய ஒரு வழி தோன்றுகின்றது தமயந்திக்கு.

நளன் தனித்திருக்கும் ஒரு இடத்துக்குத் தம் பிள்ளைகளை விளையாட விடுகிறுள். தானும் அங்கு கருத்தைச் செலுத்துகிறுள். தம் அருமை மக்களைக் காண்கின்றுன் நளன். உணர்ச்சி பொங்குகிறது.

எல்லாம் கடந்த ஞானிகள்கூட மக்கள் மேற்கொண்ட காதலை மறக்க—அல்லது மறைக்க முடியுமா ?

மக்களைக் கண்டான்; அருமை மக்களைப் பிரிந்த தம் கொடுஞ் செயலை நினைத்து மனம் நடுங்கினுன்; ஒரு நீண்ட பெருமூச்சு விட்டான்;

"மக்களை முன் காணு மனம் நடுங்கா வெய்துயிரா"

பிறகு என்ன செய்தான்; மடமட வென்று பிள்ளைகளை நோக்கி ஓடினுன். வாரி எடுத்

தான்; தனது வீரத் தோளிலே அணைத்துக் கொண்டான்.

"புக்கு எடுத்து வீரப் புயத்து அணையா"

"குழந்தைகளே! உங்களைப் பார்த்தால் என் குழந்தைகளைப் போலவே இருக்கின்றீர்கள்; நீங்கள் யாருடைய பிள்ளைகளோ?" என்று கேட்டான்.

"மக்காள் நீர்
என் மக்கள் போல்கின்றீர்?
யார் மக்கள்?"

இப்படிக் கேட்டவன் யார்? யானை பலவற்றை வைத்து ஒரு காலத்தில் ஆண்ட நளன்.

"வன்மக் களியானை மன்"

அந்தப் பாட்டை முழு உருவத்தில் பாருங்கள்.

மக்களைமுன் காணா மனநடுங்கா வெய்துயிராப்
புக்கெடுத்து வீரப் புயத்தணையா—மக்காள்நீர்
என்மக்கள் போல்கின்றீர் யார்மக்கள் என்றுரைத்
வன்மக் களியானை மன்" [தான்

இப்படி நளன் கேட்க, அவன் நளன் என்று அறியாத அவன் மக்கள் பதில் சொல்லுகின்றார்கள். அக் குழந்தைகள் இருவர்; அண்ணனும் தங்கையும்; பருவம் வராத சிறு குதலையர்.

"மன்னன் நிடதத்தார்
வாள்வேந்தன் மக்கள்யாம்"

"அன்னை தனைக் கான்விட்டு
அவன் ஏக"

எங்கள் தாயாரைக் காட்டிலே விட்டு அவன் ஓடிவிட்டான்.

"இந்நகர்க்கே வாழ்கின்றோம்"

அதுமுதல் நாங்கள் இந்த ஊரில் இருக்கின்றோம். ஆனால் எங்கள் நாடு என்ன ஆயிற்று என்று கேட்கின்றீரா? அந்த அநியாயத்தை ஏன் கேட்கிறீர்; சொல்லவும் நா எழவில்லை; அந்நியன் எங்கள் வளநாட்டை ஆள்கின்றான் என்று விம்மி விம்மி அழுது கூறினர் குழந்தைகள்.

"எங்கள் வளநாடு மற்றொருவன்
ஆள்கின்றான் என்றார் அழுது"

இம்மொழி கேட்டான் நளன். உணர்ச்சியை அவனால் அடக்கவே முடியவில்லை. யாரால் தான் முடியும்? தன் செய்கைகளெல்லாம் நினைவுக்கு வருகின்றன.

"காதலியைக் கார் இருளில் கானகத்தே கைவிட்ட" பாதகச் செயலை நினைத்துப் பதைக்கின்றான். மக்கள் வளர்ச்சியையும் மற்றொருவன் ஆள்கின்றான் என்ற உரையையும் நேரில் கண்டு கேட்கும் எந்தத் தந்தையையும் மெய்மறக்கச் செய்யும் அவ்வெண்பாவின் முழுத்தோற்றம் வருகின்றது.

மன்னன் விடதத்தார் வாள்வேந்தன் மக்கள்யாம்
அன்னை தனைக் கான்விட்டு அவன்ஏக—இந்நகர்க்கே
வாழ்கின்றோம் எங்கள் வளநாடு மற்றொருவன்
ஆள்கின்றான் என்றார் அழுது.

# யானோ அரசன்?

"நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம்" என்று பாடினார் பாரதி. "யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல் வள்ளுவன்போல் இளங்கோவைப்போல், பூமிதனில்யாங்கணுமே பிறந்ததில்லை" என்று புகன்றார் அன்னார். பாரதி மதித்த அம் முப்பெரும் புலவர்களுள் ஒருவராகிய இளங்கோவடிகளே சிலப்பதிகாரத்தைச் செய்தவர். தமிழ்த்தாய், தம் மக்கட்கு அருள் சுரக்கும் சீரிய திருவடியில் கிடந்து ஒளிவிடும் சிலம்பே சிலப்பதிகாரம் என்று தமிழறிஞர் கருதுவர். சிறந்த—வடித்தெடுத்த செந்தமிழ்ச் சொற்களஞ்சியம் சிலப்பதிகார நூல்.

கதைத் தலைவன் கோவலன்; அவன் மனைவி கண்ணகி; அவன் காதலி மாதவி. சிலப்பதிகாரம் தமிழில் முதல் நூல்; அது ஐம்பெரும் காப்பியங்களுள் ஒன்று. அந்நூல், சுமார் ஆயிரத்தைந்நூறு ஆண்டுகட்கு முற்பட்டது எனக் காலக் கணக்கர் கூறுவர். இளங்கோவடிகள் மலையாள நாட்டை அரசாண்ட மன்னனோடு உடன்பிறந்த தம்பி. இளவரசர் ஆதல்பற்றியே இளங்கோ என்ற பெயர் பூண்டார். அப்பெரியோர் துறவறத்தை மேற்கொண்டமையால் இளங்கோ அடிகள் என அழைக்கப் பெற்றார்.

இளங்கோவின் கண்ணகியார் கற்பும் பொற்பும் ஒருங்கே திரண்ட ஒரு வடிவம்.

"போதிலார் திருவினுள்
புகழுடை வடிவென்றும்
தீதிலா வடமீனின்
திறம்இவள் திறமென்றும்
மாதரார் தொழுதேத்த
வயங்கிய பெருங்குணத்துக்
காதலாள் பெயர்மன்னும்
கண்ணகியென் பாள்மன்னோ."

என்று அடிகள் கம்பீரமாக மொழிகின்றார்.

கண்ணகி பொறுமையின் பொக்கிஷம். கணவன் கணிகையர் குலத்துத் தோன்றிய மாதவிபால் நட்புப் பூண்டு, தன் வாழ்வைக் கெடுத்தொழுகினனாக, அது கண்டும் அவனை வெறுத்துத் தள்ளாது தவ வாழ்க்கை தாங்கிய "தவஞ்செய்த தவமாந் தையல்" கண்ணகி.

கோவலன், தன் பெருஞ் செல்வம் எல்லா வற்றையும் இழந்து வெறுங் கையினனாக பின்னர் வீடு திரும்ப, அவனை அன்போடு வர வேற்று, அவன் விருப்பத்தை மதித்து, அவ னோடும் மதுரை நகர் நோக்கி நடக்கின்றாள், பெருங் கொடை வள்ளல் மாநாய்கன் குலக் கொழுந்தாகிய கண்ணகி. அவள் வாழ் வைப் பாழ்படுத்திய கோவலனே அவள் பெரு மையை உணர்ந்து,

என்னொடும் போந்திங்கு என்துயர் களைந்த
பொன்னே! கொடியே! புனைபூங் கோதாய்!

கற்பின் செல்வி ! பொற்பின் கொழுந்தே !
நாணின் பாவாய் ! நீள்நில விளக்கே !

எனப் பாராட்டி உருகுகின்றான். கண்ணகியை மதுரை நகர்ப்புறத்தே வைத்துவிட்டு அவள் சிலம்பில் ஒன்றை விற்றுவரப் புறப்பட்டான் கோவலன். தட்டான் ஒருவனால் வஞ்சிக்கப்பட்டுத் திருட்டுக் குற்றம் சுமத்தப் பெற்றுக் கொலையுண்டு வீழ்ந்தான் கோவலன். இத் தீ நிகழ்ச்சி அறிகின்றாள் கண்ணகி; துக்கம் தாழவில்லை; ஓடோடி வருகின்றாள் மதுரைப் பெருநகர் வீதி வழியே; உடம்பெல்லாம் ஒரே புழுதி; கூந்தல் விரிந்து பரந்து கிடக்கின்றது; கண்ணீர் கடலாகப் பெருகுகின்றது; கையில் இன்னொரு சிலம்பை ஏந்தியிருக்கின்றாள். இந் நிலையைக் கண்டான் மதுரை யரசன்; நிலை குலைந்து விட்டான்; அவள் உணர்த்த உணர்ந் தான் தன் பிழையை; அவ்வளவே விட்டான் உயிரை.

" மெய்யிற் பொடியும் விரித்த கருங்குழலும்
கையில் தனிச்சிலம்பும் கண்ணீரும்-வையைக்கோன்
கண்டளவே தோற்றான் அக் காரிகைதன் சொற்
உண்டளவே தோற்றான் உயிர்" [செவியில்

என்ற சீரிய வெண்பா பாண்டியனின் நீதிக்கு நல்ல எடுத்துக்காட்டு.

" காவி யுகுநீரும் கையில் தனிச்சிலம்பும்
ஆவி குடிபோன அவ்வடிவும்—பாவியேன்
காலெல்லாம் சூழ்ந்த கருங்குழலும் கண்டஞ்சிக்
கூடலான் கூடாயி னான் "

எனக் கண்ணகி கூற்றாகக் கூறப்படும் மற்றொரு வெண்பா மிக நயம் வாய்ந்தது.

கண்ணகி காளியாகமாறிப் பாண்டியன் குடலைப் பிடுங்கினாள் என்று நடத்தப்படும் நாடகம் அபத்தமானது. சிலப்பதிகாரம் பாண்டியனை அவ்வளவு இழிவாகக் கூறவில்லை. தவறு செய்துவிட்டான் பாண்டியன். தவறு மன்னிக் முடியாத ஒன்றுதான். அதில் தடையில்லை.

அதற்குப் பரிகாரம் உடனே செய்துவிட்டான். அரசன் எதுவும் செய்யலாம் என்று மதுரை மன்னன் நினைத்தானல்லன். கோவலனைக் கொலைசெய்யச் சொன்னது பிழையென உணர்ந்தவுடன் அவன் உயிர் உடலை விட்டுப் பிரிந்துவிட்டது.

"சங்குளறியும் தடம்பொருநைத் துறைவன்"—தொண்டித் துறையுடையான்—தருக் கோடி காவலன்—தமிழ் வளர்த்துப் புகழ் கொண்ட பாண்டியன்,

> "பொன்செய் கொல்லன் தன்சொற் கேட்ட
> யானோ அரசன்? யானே கள்வன்
> கெடுகஎன் வாழ்நாள்!"

எனக்கூறி மயங்கி வீழ்ந்து, உயிர் கொடுத்துப் புகழ்பெற்று, நீதியை நிலைநாட்டிய அரசியல் அமைந்த நாடு, தென் தமிழ்நாடு.



# பெண்ணரசி

பெண்ணரசி என்றால் பெண்ணாகிய அரசி யென்பது பொருள். இப் பெண்ணரசி யார்? இவர்தாம் ஒரு காலத்தில் மதுரை நகரை ஆண்டவர். மதுரையில் கோயில் கொண்டு கோடிக் கணக்கான மக்களின் வழிபாட்டைப் பெறுபவர் இவர்.

இவருடைய பழம் பெருமை எட்டில் அடங் காதது. அதோடு இப்பெண்ணரசிக்குப் புதுப் பெருமையும் சேர்ந்திருக்கிறது. தொடத் தகாதவர் என்று கருதப்பட்டு கோவிலிலேயே நுழைகின்ற உரிமை பறிக்கப்பட்ட கூட்டத்தா ராகிய தம் அருமை மக்களை இப் பெண்ணரசி முதலில் தமது கோவிலுக்குள் அழைத்து, தாயைக்கண்டு மகிழும் சேய்களைக் கண்டு உள் ளம் பூரித்தார். அது காரணமாக உலகத்தின் வணக்கத்தைப் பெற்ற காந்தியடிகள் வந்து தம்மை வணங்கும் பேறு பெற்றார்.

பெண்ணரசியாகிய மதுரை மீனாட்சி கோ வில் உலகமெலாம் ஒப்பாரும் மிக்காரும் இல் லாத ஒரு தனிப் பெரியாரின் பாததூளி பட்டு உயர்ந்து புனிதம் அடைந்தது. மதுரை மீனாளை வணங்கக் காந்தியடிகள் பேராவலோடு, தள்ளாத பருவத்தில் ஏன் வந்தார்? பிறப்பு ஒன்றே காரணமாக அநியாயமாகத் தள்ளி வைக்கப்பெற்ற அருமைத் [illegible]வருக்கும்

காட்சி கொடுத்தருளும் திருக்கோலப் பெண்ணரசியின் திருமுகங்கண்டு களிப்பதற்கேயாம்.

மதுரைமீனாட்சியைப் பெண்ணரசி என்று ஏன் சொல்லுகிறோம். அவர் மதுரையை ஆண்டமையினாலேயே. மதுரை மீனாள் மலையத் துவஜ பாண்டியனுக்கு மகளாகத் தோன்றினாள்.

"மலையத் துவஜன் பெற்றபெரு
வாழ்வே வருக! வருகவே"

என்றார் ஒரு பெரியார்.

செழியர் பிரானுக்குத் திருமகளாகப் பிறந்த அம்பிகை, கலைபயின்றார்; முடிபுனைந்தார்; செங்கோலும் ஓச்சினார். பாண்டியனுக்கு ஒரே மகள்; மகவின்றிப் பல பகல் வருந்தி அருந்தவம் செய்து பெற்ற மகள்.

"செழியர் பிரான் திருமகளாய்க்
கலைபயின்று முடிபுனைந்து செங்கோல் ஓச்சி"

கலை பயின்றதோடும் முடி புனைந்ததோடும் செங்கோல் செலுத்தியதோடும் நிற்கவில்லை அத் தடாதகைப் பிராட்டியார். எல்லா உலகத்தையும் வென்றார்; அரசர் பலரும் அவருக்குக் கப்பம் கட்டினர்; பரமசிவனுடைய படைக் கணங்களைக்கூடத் தோற்கடித்தார்.

"முழுதுலகும் ஜெயங்கொண்டு
திறைகொண்டு நந்திகணம்
முனைப்போர் சாய்த்து"

இன்னும் என்ன செய்தார் அப் பெண்ணரசியார்?

உலகெலாம் தொழும் தகுதி வாய்ந்த ஒப் பற்றவனைக் கணவனாக ஏற்று, அவனுக்கு மணமாலை சூட்டினார். மணமாலிகை மட்டும் சூட்டினாரல்லர்.

"தொழு கணவற்கு அணி மண-மாலிகை சூட்டித் தன் மகுடம் சூட்டி"

அதோடு நின்றாரா? இல்லை. தான் அணிந் திருந்த ரத்னக் கிரீடத்தைத் தன் கணவர் தலையில் காதல் விளையாட்டாகத் தூக்கிவைத்து அழகு பார்க்கவில்லை. அம்முடி தாங்குதற் குரிய செல்வ வளம் மிக்க அரசையே அவனுக் குக் கொடுத்து விட்டார்.

"செல்வம் தழைவுறு தன் அரசு
அளித்த பெண்ணரசி"

இந்தப் பெண்ணரசிதான் மதுரை மீனாட்சி யென்று உலகப் புகழ்பெற்றவர். இவர் கன் னியாக இருந்த காலத்தே அரசாட்சி மேற் கொண்டமையாலேயே பாண்டி நாடு கன்னி நாடு என்று அழைக்கப்பட்டது.

"உலகம் யாவையும் ஈன்றவள்; உம்பருள் உயர்ந்த திலக நாயகி"

அரசாண்டு கோவில் கொள்ளப் பெற்றது மதுரை. அம்மதுரைக்கு அரசியின் பாத தாம ரையைத் திருமுடியில் சூடி மகிழ்கின்றார் பரஞ் சோதி முனிவர். அந்த ஆலவாய் ராணியின் பொற்கழலைத் தலையால் வணங்கும் பேற்றைப் பறிகொடுத்திருந்த ஹரிஜனத் தோழர்கள்

இன்று அவள் அடி முடி சூடி ஆனந்த வெள்ளத்தில் மூழ்குகின்றனர். அக்கோலம் கண்டு மகிழ்ச்சிப் பெருங்கடலாடி காந்தி அடிகளாரும் அப் பெண்ணரசி அடிக்கமலம் தலைமேல் வைப்பா''ராயினர்.

''செழியர்பிரான் திருமகளாய்க்
கலைபயின்று முடிபுனைந்து செங்கோல் ஓச்சி
முழுதுலகும் ஜெயங்கொண்டு
திறைகொண்டு நந்திகணம் முனைப்போர் சாய்
தொழுகணவற்கு அணிமணமா [துத்
விகைசூட்டித் தன்மகுடம் சூட்டிச் செல்வம்
தழைவுறுதன் அரசளித்த
பெண்ணரசி அடிக்கமலம் தலைமேல் வைப்பாம்''



# நாடு எது?

நாடு எது என்பதைப் பற்றிப் புலவர் பெருமான் என்ன சொல்கின்றார் என்று பார்க்கலாம். நாடு எனப் பிரிக்கப்பட்ட எல்லாம் நாடாகாது. மனித வடிவந்தாங்கிய எல்லோரையும் மனிதராக ஏற்றுக்கொள்ள அறிஞர் இசைவதில்லை. மனிதர்க்குரிய குணம், செயல் வேண்டும்; அவை கொண்டோரே மனிதராகக் கொள்ளப் பெறுகிறார். நாட்டிற்குச் சில இயல்புகள் வேண்டும்; அவை பொருந்தியதே நாடு என்றும், மற்றது நாடல்ல எனவும் வள்ளுவர் தமது தமிழ் அறத்தில் சாற்றுகின்றார். குறையாத விளைச்சல் எங்கிருக்கின்றதோ அதுதான் நாடு. தக்கவர்கள் இருக்குமிடம் எதுவோ அதுவே நாடு. கேடில்லாத செல்வமுடையார் எங்கு உறைகின்றனரோ, அவ்விடமே நாடு என்ற பெயருக்கு உரிமை உடையது.

"தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்
செல்வரும் சேர்வது நாடு."

நாடு என்று ஒன்று இருக்குமானால் அங்கு பசி யிருக்கக்கூடாது; பிணியிருத்தல் ஆகாது; பகை தலை காட்டப்படாது; பெரும் பசியும் தீராத நோயும் அழிக்கும் பகையும் இல்லாது நடப்பதே நாடு.

"உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்
சேராது இயல்வது நாடு."

நாடு என்று ஒன்றைச் சொல்லவேண்டுமானால், அந் நாட்டிலுள்ளார் சிரமப்பட்டுத்

தேடிச்சேர்க்கும் நிலையிருக்கக்கூடாது; தேடாமல் அடையும் செல்வம் உடையதையே நாடு என்று கூறுவர்;

"நாடா வளத்தன நாடென்ப"

தேடி வருந்தச் செல்வம் கொடுக்கும் நாடு நாடாகமாட்டாது;

"நாட வளந்தரும் நாடு நாடல்ல"

வள்ளுவர் கண்ட நாட்டிற்கும், இன்று நாம் காணும் ஒன்றுக்கும் ஏதாவது தொடர்பு இருக்கிறதா? இன்று பசியினால் மடிவோர் தொகைக்கும், பிணியினால் சாவோர் கணக்குக்கும் பகையினால் அழிவோர் எண்ணிக்கைக்கும் எல்லையுண்டா? வள்ளுவர் கொள்கைப்படி இந்நாள் நாம் வாழும் இடத்தை நாடு என்று சொல்லவே முடியாது.

வள்ளுவர் வாழ்ந்த நாட்டை மகா கவி பாரதியார் அகக் கண்ணால் கண்டு மகிழ்ந்தார். அக்காட்சி பின்வரும் பா வடிவத்தோடு விளங்குகின்றது.

"நிலமுடி தரித்தபல மலைசேர் நாடு
நீர்அமுதம் எனப்பாய்ந்து நிரம்பும் நாடு
கோலமுறு பயன்மரங்கள் செறிந்து வாழும்
குளிர்காவும் சோலைகளும் குலவும் நாடு
ஞாலமெலாம் பசியின்றிக் காத்தல் வல்ல
நன்செய்யும் புன்செய்யும் நலமிக் கோங்கப்
பாலடையும் நறுநெய்யும் தேனும் உண்டு
பண்ணவர்போல் மக்களெலாம் பயிலும் நாடு.

பாலும் நெய்யும் தேனும் பருகிக் களித்து வாழ்ந்த மக்களின் இன்றைய நிலையென்ன? ஞாலம் எலாம் பசியின்றிக் காத்தல் வல்ல-உலகம் முழுதுக்கும் உணவு கொடுக்கும் வசதி பெற்ற இந்தியா, ஏன் இன்று உணவுக்குப் பிறநாட்டை எதிர் நோக்கி நிற்கிறது? காரணம் பிறர் ஆட்சியே என்று சொல்லியா தெரிய வேண்டும்!

அதையும் சொல்லுகின்றார் வள்ளுவர் நாடு என்ற அதிகாரத்திலேயே.

"பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும் வேந்து
அலைக்கும்
கொல்குறும்பும் இல்லது நாடு."

பல்குழு: பல வேறுபட்ட கூட்டம். பாழ் செய்யும் உட்பகை: பாழ்படுத்துகின்ற உள் நாட்டுக் கலகம். வேந்து அலைக்கும் கொல் குறும்பு: அரசனை அல்லது அரசியலை அலையச் செய்யும் கொல்வினைக் குறும்புக் கூட்டம். இல்லது நாடு: இவைகளையெல்லாம் எது பெற வில்லையோ அதுவே நாடு. இவற்றில் இந்நாள் இங்கு எது இல்லை என்று காண்பதற்கு நீண்ட நுணுகிய ஆராய்ச்சி தேவையில்லை.

மக்களுக்கும் வேற்று அரசியலுக்கும் உள்ள வேறுபாட்டினாலேயே. அதையும் வள்ளுவர் சொல்லாமல் விட்டாரல்லர்.

"ஆங்கமைவு எய்தியக் கண்ணும் பயமின்றே
வேந்தமைவு இல்லாத நாடு"

என்று நாடு என்ற அதிகாரத்தின் கடைசிப் பாட்டில் கூறுகின்றார்.

வேத்தியலோடு பொருந்தும் குடிகள் இல்லாத நாடு எல்லாப் பொருத்தங்களும் பெற்றிருந்தாலும் பயன் பெருது என்பது இக் குறள் கருத்து.

மக்களுக்கு அரசியல் பொருந்த வில்லையானல் அந் நிலையிலுள்ள ஒன்று வள்ளுவர் கூற்றுப்படி நாடு என்று சொல்லக்கூடிய தகுதியைப் பெருது என்பதை நாம் நடைமுறையில் கண்டோம்.



# சொல்லினல் சொலக் கற்றிலம் யாம்

இலங்கைப் போர்க்களத்திலே யுத்தம் கடுமையாக நடக்கின்றது. இராமன் தம்பியும் இராவணன் தம்பியும் அதிர்ந்து போர் செய்கின்றார்கள். பின்னவனுக்குக் கோபம் மூள்கின்றது. சில கடுமையான வார்த்தைகள் அக் கும்பகர்ணனின் வாயினின்றும் புறப்படுகின்றன, இலக்குமணனை நோக்கி.

'அடே! நாங்கள் மூன்றுபேர் உடன் பிறந்த சகோதரர்கள்; ஆனல் எங்கள் பெற்றோர்க்கு ஒரே ஒரு அருமைத்திருமகள்; அவள் தவஞ்செய்து பெறப்பெற்றவள்;

"பெய்தவத்தின் ஓர் பெண் கொடி
எம்உழைப் பிறந்தாள்"

அந்த எங்கள் அருமைத் தங்கையை

"செய்த குற்றம்ஒன்றில்லவள்"

ஒரு குற்றமும் செய்யாத அவளை,

"நாசி வெஞ்சினத்தால்"

ஆக்கரிய மூக்கு முதலியவற்றைக் கொடுங் கோபத்தால்

"கொய்த கொற்றவ!"

அறுத்துத் தள்ளிய வீரனே! என்ன வீரனடா நீ? ஒரு பெண் பிள்ளையைத் தகாத முறையில் சில உறுப்புக்களை அறுத்துத் தள்ளினய்; அவள் கூந்தலைப் பிடித்து இழுத்தாய்;

அவள் சாதாரணமான ஒரு பெண்ணு ? எங்கள் தங்கையல்லவா ? அதிலும் சிறப்பாக மூன் றுலகுடையவன் இராவணேச்வரன் ; சிவன் இருந்த மலே எடுத்தவன் ; தேவர்களைப் பணி கொண்டவன்; திசையானை மருப்புஒசித்தவன்;

அவனது தங்கை என்பதையாவது நினேந் தாயா ?

"கூந்தல் தொட்டு ஈர்த்த கைதலத் திடைக்
கிடத்துவன் காக்குதி"

அவள் குழல் தொட்டு இழுத்த உன் கைகள் என் வாளால் வெட்டுண்டு இதோ தரையில் விழப் போகின்றன ; முடியுமாளுல் காப்பாற் றிக் கொள்.

"பெய்த வத்தின்ஓர் பெண்கொடி
எம்உழைப் பிறந்தாள்
செய்த குற்றமொன்று இல்லவள்
நாசிவெஞ் சினத்தால்
கொய்த கொற்றவ! மற்றவள்
கூந்தல்தொட்டு ஈர்த்த
கைதலத்திடைக் கிடத்துவன்
காக்குதி என்ருன்."

இவ்வாறு வீரம் பேசினுன் இலங்கையின் இளேய வீரன்

கும்பகர்ணன் இலங்கையிலுள்ள தலே சிறந்த வீரர்களுள் ஒருவன் ; சகோதர வாஞ் சையில் நிகரற்றவன். ஆனல் அவனது மேலே கூறிய கூற்றில் உண்மை யேதும் இருப்பதா கத் தெரியவில்லே. சூர்ப்பணகை ஒரு குற்ற

மும் செய்யவில்லை என்று பேசுகிறான். அது
உண்மையா? தன் வடிவத்தையே மாற்றிக்
கொண்டு வந்து இராமனை ஏமாற்ற முயன்று
தோல்வியடைந்து யாருமில்லாத சமயம் என்று
கருதிச் சீதையைத் தூக்கப்போய் இலக்குமண
னால் மானபங்கம் செய்யப்பட்டாள் அவள்
என்பதல்லவா கதை?

"செய்த குற்றம் ஒன்றில்லவள்" என்று
அவளைப்பற்றிக் கூறுவது எப்படிப் பொருந்
தும்? இங்கு, தர்க்கத்தில் முனைந்து கும்பகர்
ணன் கூற்றுக்குப் பதில் சொல்லிக் கொண்
டிருக்க வில்லை இலக்குமணன்.

கும்பகர்ணன் பேசிய வீரப் பேச்சுக்குப்
பதில் வாய்ப் பேச்சுப் பேச விரும்பவில்லை
அவன்.

ஒரே பேச்சில் அடக்கிவிடுகிறான் இரா
மன் தம்பி இராவணன் தம்பியை.

"அல்லினால் செய்த நிறத்தினான்"

அல் என்றால் இருட்டு என்பது பொருள்.
இருட்டைத் திரட்டி ஒரு வடிவமாகச் செய்யப்
பட்ட நிறத்தை யுடையவன். யார் அவன்?
அவன்தான் கும்பகர்ணன்.

"அனையது பகர"

மேலே சொன்ன பிரகாரம், அதாவது
"ஒரு குற்றமும் செய்யாத என் தங்கையை
மூக்கு முதலியவற்றை அறுத்த கொடியவனே!
அவள் கூந்தல் பிடித்து இழுத்த கையை

வெட்டிவீழ்த்தப் போகின்றேன்; ஜாக்கிரதை" என்று சொல்ல,

"மல்வினால் செய்த தோளினன்"

மற்போர் கொண்டு வகுத்துச் செய்யப்பட்ட தோள்களையுடைய இலக்குமணன்,

"மாற்றங்கள் நும்பால்"

பேச்சுக்கள் நும்போன்றவர்களிடத்திலே, வாயினால் பேசிப் பயனில்லை. "அடே, கும்பகர்ணா! வில்லை யெடு! வாயை மூடு! வில்லினால் பேசிக் கொள்ளுவோம்!

"வில்லினால் சொல்லின் அல்லது
வெந்திறல் வெள்க"

வெறும் பேச்சுப் பேசினால் வீரலட்சுமி வெட்கப்படுவாள்! இது போர்க்களம். அவளுக்கு மகிழ்ச்சியான காரியத்தைத் தொடங்குவோம்.

வெறும் பேச்சுப் பள்ளியில் நாம் படிக்கவில்லைஎன்று கூறிமுடித்தான் இலக்குமணன்.

"அல்லி னால்செய்த நிறத்தினன்
அனையது பகர
மல்லி னால்செய்த தோளினன்
மாற்றங்கள் நும்பால்
வில்லி னால்சொல்லின் அல்லது,
வெந்திறல் வெள்கச்
சொல்லி னால்சொலக் கற்றிலம்
யாமெனச் சொன்னான்."

# வீரன் வீட்டுமன்

மகா பாரதக் கதை நம்மில் அநேகருக்குத் தெரியும். பாரதத்தைப் புரட்டினுல் எங்கு பார்த்தாலும் வீரர்களே மலிந்து நிற்கக் காண லாம். அத்தகைய வீரர் எல்லாருள்ளும் எல்லா வகையிலும் மேம்பட்ட வீரன் வீட்டுமன் என் னும் வேந்தனே. பீஷ்மன் என்பதின் திரிபே வீட்டுமன் என்பது. மற்ற வீரர்கள் போர்த் தொழிலில் மட்டும் வீரராக இருக்கலாம். வீட்டு மன் அத்தகையன் அல்லன். போர்த்தொழி லில் அவன் வல்லவன் என்பதோடுகூட இளமை தொட்டே மகா வீரமான ஒரு விரதத் தை மேற்கொண்டு அதைச் சாகும்வரை நிறை வேற்றினுன் வீட்டுமன்.

இந்த உலகத்தில் யாரும் செய்தற்கரிய விரதத்தை மேற்கொண்டான் வீட்டுமன். எதன் பொருட்டு? தன்னைப் பெற்று வளர்த்த தந்தையின் பொருட்டு. அவ்விரதத்தை இறுதி வரைக் காத்த பெருமையில் வீட்டுமனுக்கு ஒப்பாரும் மிக்காருமிலர் என்று சொல்லலாம்,

"விரதம் ஆபரணம் என அணிந்த
திறல் வீடுமன்"

என்று பாரத ஆசிரியரால் அவன் பாராட்டப் படுகின்றுன்.

உலகத்தார் அழகுக்கு நகை யணிவார்கள். வீடுமனை அழகு செய்யும் நகை அவனது விர

தமே. எந்த வைர வியாபாரியும் அதன்விலையை மதிப்பிட முடியாது.

இந்த வீட்டுமன் பாண்டவருக்கும் துரியோதனாதியர்க்கும் முறைக்குப் பாட்டனுவான். இவன் தம்பியின் பேரர்களே அவர்கள். அந்தக் கதைதான் இங்கு வரப்போகின்றது.

வீட்டுமனின் தந்தையின் பெயர் சந்தனு. சந்தனு அரசன் குரு நிலத்தை அரசாண்ட காலத்து ஒருநாள் கானகத்துக்கு வேட்டைக்குப் போனுன்; அங்கு பரிமளகந்தி என்ற கடல்புலத்து வாழும் வலையர் குலத் தலைவன் மகளைக் கண்டு, அவள் அழகில் மயங்கி விட்டான்; அவள் தந்தையிடம் சென்று அவளைத் தனக்கு மணம் செய்து தரும்படி கேட்டான்.

'மணம் செய்வதில் தடையில்லை. ஆனுல் தங்களுக்கு அரசாள்வதற்கு மகன் வீட்டுமன் இருக்கின்ருன். எனவே என் மகள் வயிற்றுப் பிள்ளைக்கு அரசியல் கிடைக்காத நிலைமையில் நான் மணம் செய்துதர விரும்பவில்லை' என்று கூறி மறுத்துவிட்டான் பரிமளகந்தியின் தந்தை. அவனது வேண்டுகோள் தன்னுல் நிறைவேற்ற முடியாததாக இருந்ததால் ஒன்றும் சொல்ல மாட்டாமல் ஆருத் துயரத்தோடு திரும்பிவிட்டான் சந்தனு. அன்று தொட்டுக் கவலை மிகுதியால் துரும்பாக இளைத்துக்கொண்டே வந்தான் அரசன்.

சில நாட்கள் சென்ற பின் தந்தையின் மாறுதலை உணர்ந்தான் மைந்தன். சாரதி

யை விசாரித்துத் தந்தையின் கவலேக்குக் காரணத்தை அறிந்துகொண்டான்.

'என்ன ! தந்தையின் நலிவுக்கு நாஞ காரணன் ? என் பொருட்டா தந்தைக்கு இவ்வாட்டம்?' என்று ஏங்கினன்.

'இந்தக் கிழத்துக்கு ஏன் இந்தக் கேடு' என்று நினேத்தான் அல்லன். உடனே புறப்பட்டான். தந்தையை ஒன்றுமே கேட்கவில்லே. நேராகச் சென்ருன் பரிமள கந்தியின் தந்தையிடம்.

"கேட்ட அக்கணத்தில் கடற்புலத்து அரசைக்
கேண்மையோடு அடைந்து இளவரசும்"

இளவரசனுகிய வீட்டுமன், கேட்ட க்ஷணமே கடற்கரை அரசனே நண்ணினன்; எந்த முறையோடு போனன்? உறவு கொண்டாடிச் சென்ருன். இனி அவன் உறவினனுகப் போகின்ருன் அல்லவா? ஆதலால்,

"கேண்மையோடு அடைந்து"

என்று கூறுகிருர் கவி.

அங்கு போய் என்ன சொல்லுகின்ருன் வீட்டுமன்?

"பாட்டன் நீ எனக்கு"

எனக்குப் பாட்டன் இனிமேல் நீதான்.

"பெற்றதாய் தானும் பகிரதி அல்லள்
நின்மகளே"

என்னேப் பெற்ற தாய் கங்கையல்லள்; நின் மகள்தான்.

"நாட்டம் அன்று உனக்கு யாது"

உன்னுடைய நோக்கம் அன்றைக்கு எதுவோ

"அது நிலை" அது நிச்சயம்.

அன்றைய தினம் நீ மன்னனிடம் கேட்டா யல்லவா? அது உறுதி. அதைப்பற்றிச் சொல்லக் கூடிய உரிமை எனக்குத்தான் உண்டு.

"இந்த ஞாலமும் எம்பியர் ஞாலம்"

இந்த உலகமானது உன் மகளாகிய என் தாய் வயிற்றில் பிறக்க இருக்கின்ற என் தம்பிகளுக்குச் சொந்தம்.

"நீட்டம் அற்று இன்றே திருமணம்
நேர்வாய் நீதிகூர் நிருபனுக்கு"

காலந் தாழ்த்தாமல் இன்று தினமே நீதி யில் மிக்க நிருபனாகிய சந்தனுவுக்கு உன் மகளை மணம் புரிவிப்பாயாக என்றான் வீட்டு மன்.

"கேட்டஅக் கணத்தில் கடற்புலத்து அரசைக்
கேண்மையோடு அடைந்துஇள வரசும்
பாட்டன்நீ எனக்குப் பெற்றதாய் தானும்
பகிரதி அல்லள்நின் மகளே
நாட்டம்அன்று உனக்குயாது அதுநிலை இந்த
ஞாலமும் எம்பியர் ஞாலம்
நீட்டமற்று இன்றே திருமணம் நேர்வாய்
நீதிகூர் நிருபனுக்கு என்றான்"

இப்படிச் சொன்னதோடு அமையாமல் பின் னல் அரசியல் உரிமை விவகாரம் எழாமல்

இருக்கும்பொருட்டுத் தான் திருமணமேசெய்து கொள்வதில்லை என்ற விரதத்தை மேற்கொண் டான் வீட்டுமன்.

இளம் வயதில் வீட்டுமனால் செய்யப்பட்ட இந்த பயங்கரமான சபதத்தைக் கேட்டு அனை வரும் திடுக்கிட்டுப் போய்விட்டார்கள். பிறகு பரிமள கந்தியைச் சந்தனுவுக்கு அவள் தந்தை மணம் செய்து கொடுத்தான் என்ற நிகழ்ச்சி முதலியவற்றைச் சொல்லத் தேவையில்லை யல் லவா? அந்த வழித் தோன்றல்கள் தாம் பாண் டவர், கௌரவர் முதலாயினோர். சந்தனு செய்த காரியம் தவறானது.

> " தந்தையர்க்கு உதவும் உதவியில் எனக்குச்
> சதமடங்கு உதவினை; உனக்கு
> மைந்தருக்குஉதவும் உதவியில் சிறிதும்
> மாதவம் செய்திலேன் உதவ "

என்று வீட்டுமனைப் பார்த்து வருந்துவது அவன் செய்த தவறுக்குப் பரிகாரமாகாது.

வீட்டுமன் மகாவீரன்; தன்னலத்தை அடி யோடு துறந்தவன்; இவ் வுலகத் தலைமை இன்பம் என்று கருதப்படுகின்ற பெண் ணின்பத்தைத் தந்தையின் பொருட்டு அடி யோடு கைவிட்டவன்; அதனைக் கடைசிவரைக் காப்பாற்றியவன்; எந்த மண்ணின் பொருட் டுப் பாண்டவர்களோடு பகைத்துத் துரியோ தனன் தகாத காரியங்கள் பல செய்து பாண் டவர்களிடம் நாடு கவர்ந்தானோ அந்த மண்

ணரசாட்சியை வேண்டாம் என்று ஒதுக்கிய வன் இப்பெரியோன்.

" தந்தை காதலுறு தன்மை கண்டு
இளைய தாய் பயந்த இருதம்பியர்க்கு
இந்த வாழ்வும் அரசும் கொடுத்தவன் "

"மாதர் இரு கண்ணளிபடாத தொடைமீளி"

என்று வில்லிபுத்தூர் ஆழ்வாரால் பாராட்டப் படும் மகா வீரன்—பாரதப்படைகள் அனைத் தையும்

" ஒரு பகலில் யான் மலைவன் "

என்று கூறும் வீராதி வீரன் வீட்டுமன்.



# மேக விடு தூது.

வானத்தில் உலாவுகின்ற மேகத்தைத் தூதாக விடுக்கின்றாள் ஆண்டாள். மேகம் மிகவிரைவாகச் செல்லக்கூடியதாதலின் தான் விரும்பிய இடத்துக்குச் செய்தி சீக்கிரம் கிடைத்துவிடும் என்பது கருதியே தூதுவிடுக்க மேகம் தேர்ந்தெடுக்கப்பெற்றது. 'காரெனக் கடிது சென்றான்' என்று கம்பன் சொல்கின்றான். காரைப்போல வேகமாகப் போனான் என்பது பொருள். கார் என்றால் மோட்டார் கார் என்று அர்த்தம் இல்லை. கார் என்பது மேகம். மோட்டார்க்கார் கம்பன் காலத்தில் இல்லையல்லவா?

காரைத் தூதுபோக்குகின்றார் ஆண்டாள் நாச்சியார். எங்கு? திருமால் வாழும் வேங்கட மலைக்கு. தமிழ் நாட்டின் ஏறக்குறையத் தெற்கு எல்லையாகிய ஸ்ரீ வில்லிபுத்தூரிலிருந்து தமிழ் நாட்டின் வடக்கு எல்லையாகிய திருப்பதி மலைக்கு மேகம் தூதாக விடப்படுகிறது. எதற்காக என்று சொல்லியா தெரிந்துகொள்ள வேண்டும்? ஆண்டாள் காதல்பெருக்கைத் திருவேங்கடம் உடையானுக்குச் சொல்லத்தான்.

கடவுள் அடியார்கள், தாங்கள் நாயகியாகி ஆண்டவனை நாயகனாக்குவது மரபு. திருமங்கை மன்னன், நம்மாழ்வார், இராமலிங்க சுவாமிகள் முதலிய பெரியார்கள் இத்துறை புகுந்து

ஏராளமான காதல் பாக்கள் செய்திருக்கின்றனர். ஆண்டாள் இயற்கையிலேயே பெண் உடல் பெற்றவர். அவர் மனிதர் எவரையும் மணக்காமல் பரந்தாமனையே கணவனாகக் கொண்டொழுகினார் என்பதை அவர் தம் அருமைமிக்க பாடல் பல விளக்கிநிற்கின்றன.

ஆண்டாள் என்னும் சூடிக்கொடுத்த சுடர்க்கொடி, பெரியாழ்வார் என்னும் பரம பக்தரின் வளர்ப்பு மகள். தன் மகள் திருமாலோடு கொண்ட உறவை நினைந்து உருகிப் பெரியாழ்வார் பாடும் அரிய பாசுரம் இங்கு நினைக்கத்தக்கது.

> " ஒருமகள் தன்னை உடையேன்
> உலகம் நிறைந்த புகழால்
> திருமகள் போல வளர்த்தேன்
> செங்கண்மால் தான்கொண்டு போனான் "

என்று தன் அரிய மகளைத் திருமால் கவர்ந்த முறையைத் தந்தையார் பாடி மகிழ்கின்றார்.

வேங்கடவனைக் காதலனாக விதித்துக் கொண்ட ஆண்டாள், அவன் வந்து அருளாமை கண்டு மேகத்தை அனுப்புகின்றார் தூதாக. பத்து அருமையான பாசுரங்கள். அவற்றில் சிலவற்றை இங்கு பார்க்கலாம். மேகங்களைக் கூப்பிடுகின்ற முறை மிக நயமாக இருக்கும்.

> " மாமுத்த நிதிசொரியும்
> மாமுகில்காள்! "

" விண்ணீல மேலாப்பு
விரித்தாற்போல் மேகங்காள்!"

" மின்னாகத்து எழுகின்ற
மேகங்காள்!"

" வான்கொண்டு கிளர்ந்தெழுந்த
மாமுகில்காள்!"

" சலங்கொண்டு கிளர்ந்தெழுந்த
தண்முகில்காள்!"

" மதயானை போலெழுந்த
மாமுகில்காள்!"

எனத் தூதுசொல்லவேண்டிய மேகங்கள் பாராட்டப்படுகின்றன.

" திருவேங்கடமலையிலே திருமகள் தங்கிய மார்பையுடைய செங்கண்மாலிடம் சென்று என்னுடைய இள நலத்தை அவர் அனுபவிக்க என் சம்மதத்தைச் சொல்லுங்கள்! மின்னல் தவழும் மேகங்களே!

" மின்னாகத் தெழுகின்ற
மேகங்காள்! வேங்கடத்துத்
தன்னாகத் திருமங்கை
தங்கியசீர் மார்பற்கு
என்னாகத்து இளங்கொங்கை
விரும்பித்தாம் நாள்தோறும்
பொன்னாகம் புல்குதற்கென்
புரிவுடைமை செப்புமினே."

'வானம் முழுதையும் கவர்ந்துகொண்டு கிளர்ச்சியோடு எழுந்திருக்கின்ற முகில்களே! திரு

வேங்கட மலையிலேயுள்ள தேன் பிலிற்றும் மலர்களெல்லாம் சிதறிப்போகுமாறு திரண்டு பொழியும் திறமைகொண்ட நீங்கள், ரத்தம் தோய்ந்த கூர்மையான நகங்களால் இரணியன் உடலைக் கிழித்த அவ்வளவு பெருமை வாய்ந்த அவன், என்னுடைய வளைகளைக் கவர்ந்து வைத்துக்கொள்வது முறையாகாது, அவற்றை அவன் தந்துவிடல் வேண்டும் என்பதை, எடுத்துச் சொல்லுங்கள்!

"வான்கொண்டு கிளர்ந்தெழுந்த
மாமுகில்காள்! வேங்கடத்துத்
தேன்கொண்ட மலர் சிதறத்
திரண்டேறிப் பொழிவீர்காள்:
ஊன்கொண்ட வள்உகிரால்
இரணியனை உடல் இடந்தான்
தான்கொண்ட சரிவளைகள்
தருமாகில் சாற்றுமினே."

"முத்துக் குவியலைக் கொட்டும் முகில்களே! வேங்கடத்திலே வீற்றிருக்கின்ற நீலமேனியன் செய்தி என்ன? அவன் என்னைப் பற்றி என்ன சொன்னான்? கொஞ்சம் சொல்லுங்கள்! காமத் தீ என்னைக் கொளுத்துகின்றது; அதனால் நடுச்சாமத்தில் வந்து தென்றல் யமன் என்னை வதைக்கின்றான்!

"மாமுத்த நிதிசொரியும்
மாமுகில்காள்! வேங்கடத்துச்
சாமத்தின் நிறங்கொண்ட
தாடாளன் வார்த்தைஎன்னே?

காமத்தீ உள்புகுந்து
கதுவப்பட்டு இடைக்கங்குல்
ஏமத்தோர் தென்றலுக்கிங்கு
இலக்காய்நான் இருந்தேனே.''

''மதயானையைப்போல எழுந்திருக்கின்ற பெரிய மேகங்களே! திருவேங்கட மலையை இருக்கையாகக் கொண்டு வாழும் முகில்களே! அந்தப் பாம்புப் படுக்கையுடையான் என்ன தான் சொல்கின்றான்? உலகத்து உயிர்களுக் கெல்லாம் என்றும் கதியாக இருக்கின்ற அவன் நினைத்துப் பார்க்காமல், அவன்மேல் காதல்கொண்ட ஓர் இளம் நங்கைக் கொழுந் தைக் கொலை செய்துவிட்டான் என்ற பேச்சு ஒன்றுஎழுமானால் அவனை உலகம் மதிக்குமா?'' என்று கோபக் காதலோடு குமுறுகின்றார் கோதையார்.

''மதயானை போல் எழுந்த
மாமுகில்காள்! வேங்கடத்தைப்
பதியாக வாழ்வீர்கள்!
பாம்பணையான் வார்த்தை என்னே?
கதிஎன்றும் தானாவான்
கருதாதுஓர் பெண்கொடியை
வதை செய்தான் என்னும்சொல்
வையகத்தார் மதியாரே!''



## ஆடீர் ஊசல்

'ஆடீர் ஊசல்' என்பதை 'ஊசல் ஆடீர்' என்று மாற்றுதல் வேண்டும். ஊசல் என்பது தற்காலத்தில் ஊஞ்சல் என்று மருவி விட்டது. ஊசல் ஆடீர் என்றால் ஊஞ்சல் ஆடுவீராக! என்பது பொருள். ஊசல் பற்றிய பாடல் தமிழில் அதிகம். ஆடீர் ஊசல், ஆடாமோ ஊசல், பொன்னூசல் ஆடாமோ என்பன போன்ற சொல்-தொடர்களால் அப்பாடல்கள் முடிவு பெறும்.

திருமாலிருஞ்சோலை மலை, அல்லது அழகர் மலை என்பது மதுரையை அடுத்த ஒரு பழமையான ஊர். அங்குக் கோவில் கொண்டிருக்கும் திருமாலுக்குக் கலம்பகம் என்ற ஒரு பிரபந்தம் பாடினார் ஓர் தமிழ் அறிஞர். அருமையான பாடல்கள். அந்த ஆசிரியர் யார் என்று தெரிந்து கொள்ளச் சான்று இல்லை. அவர் பெயர் நமக்குத் தெரியாது. பெயர் தெரியாது மறைந்துபோன தமிழ் அறிஞர் பலருள் இவ் ஆசிரியரும் ஒருவர். இவ் ஆசிரியர் தமிழ்த் தாய்க்குச் சூட்டிய நல்ல அணி, அழகர் கலம்பகம் என்ற நூல். அதிலுள்ள சிறந்த பாடல்களுள் ஒன்று இவ் ஊசல் பாட்டு. திருமாலை ஊசல் ஆட அழைக்கின்றார் ஆசிரியர். எப்படி ஊசலில் இருந்து ஆடுவது? தனிமையாக ஆடினால் அவ் ஆட்டம் சுவை தாராது. காதலி

பக்கத்தில் அமர்ந்திருத்தல் வேண்டும். திருமாலின் இல்லாள் சாதாரணமானவளா? திருமகளே அவளல்லவா? அந்த அழகுத் தெய்வத்தைப் பக்கத்தில் அமர்த்தி ஊசல் ஆடும் காட்சி, பார்ப்போர் கண்களையும் உள்ளத்தையும் ஒருங்கே கொள்ளை கொள்ள வல்லதல்லவா? அதை அலங்கரித்துப் பாடுகின்றார் புலவர். மிக அழகிய பாட்டு. கற்பனையின் சிகரத்தை எட்டிவிட்டார் கவி.

"மணங்கமழ் பூவையும் மயிலும்"

திருமாலும் திருமகளும் அமர்ந்திருக்கும் திருக்கோலம் எப்படியிருக்கின்றது? வாசனை வீசுகின்ற காயாம்பூ மரமும் அதன்மீது வீற்றிருக்கின்ற மயிலும் போலத் தோன்றுகிறது. திருமால் காயாம்பூ மேனியன்; திருமகள் மயில் அனைய சாயலாள். மணம் கமழ் பூவை யென்றமையிலிருந்து மணம் கமழாப் பூவை ஒன்று உண்டு எனப் புலவர் பிரித்துக் காட்டுகிறார். பூவை யென்று மற்றொன்றுக்கும் பெயருண்டு. நாகணவாய்ப்புள் என்று கூறப்படும் ஒரு பறவைக்குப் பூவை என்று பெயர். தற்காலம் அது 'நாகருந்தான் குருவி' என்று சொல்லப் படுகிறது. கிளியைப்போல அதுவும் பேசும் இயல்புடையது. அந்தப் பூவை யினின்றும் பிரித்துக் காட்டவே காயாம்பூவாகிய இந்தப் பூவை, மணம் கமழ் பூவை என்று வழுத்தப்பட்டது. இதே பூவையைப் "பறவாப் பூவை" என்று விளக்கிக் காட்டுகிறார் ஒரு பழம் புலவர்.

இனி எவ்வாறு காட்சி யளிக்கின்றார் திரு மாலும் தேவியாரும் என்று பார்க்கலாம்.

" தமாலக் காடும் வண்கிளியும் "

போலத் தெரிகின்றன. தமாலம் என்பது பச்சிலை; பசிய இலைகள் அடர்ந்த பச்சைக் காடாக இருக்கின்றான் கண்ணன்; அப் பச்சையா மலைபோல் மேனிக் காட்டிலே விளை யாடித் திரிகின்ற கிளியாகின்றாள் இலக்குமி தேவி.

"நில வெற்பும் மடமான் கன்றும்"

அவன் நீலமலைபோல் கம்பீரமாக இருக்கின் றான்; அவள் அந்த மலைமீது ஏறித் துள்ளிக் குதித்து ஓடி யாடி விளையாடுகின்ற இளமை மிக்க மான்குட்டி போல் துவள்கின்றாள்.

" இணங்கு கடலும் துகிரும் "

நாராயணன் பொருத்தமான கடலாகின்றான்; பிராட்டி அக் கடலின் உள்ளே பின்னிக் கலந்து படர்ந்திருக்கின்ற பவளக்கொடியாக அமைகின்றாள்.

" காரும் மின்னும் "

சோலைமலை யரசன், மேகமாக விளங்குகின் றான்; அம் மலையரசி அக் கார்மேகத்தினின் றும் தோன்றும் மின்னலைப் போல் ஒளி வீசுகின்றாள்.

"யமுனை யெனும் திருநதியும் எகினப்பேடும்"

கடவுள் யமுனை யென்ற அழகானகரிய ஆறு போல் நிறங் காட்டுகின்றான்; நம் தாயாராகிய

அவன்தேவி, அந்நதியினூடுபாய்ந்து குடைந்து ஆடுகின்ற பெண் அன்னத்தை ஒத்திருக்கின்ருள்.

"கணங் குழைய கோசலை
தேவகி அசோதை
கண்மணியும் பாவையும் போல்"

கூட்டமான காது ஆபரணம் அணிந்த கோசலை, தேவகி, யசோதை என்று சொல்லப்படும் தாய்மார்களின் கண்மணிகளின் கருமணியாகக் காணப்படுகின்ருன் மகன்; அம் மணிகளுள் ஆடும் பாவையாகக் காட்சி யளிக்கின்ருள் மருகி. இராமனை வயிறு வாய்த்துப் பெற்றவள் கோசலை. கண்ணனைப் பெற்றெடுத்த தாய் தேவகி; அவனை வளர்த்து மகிழ்ந்த சீமாட்டி யசோதை. அம் முப்பெரு நங்கையர்களின் கண்மணியாகவும் பாவையாகவும் விளங்குகின்றனர் மகனும் மருமகளும்.

"கமல வீட்டின் அணங்கரசியுடன் குலவி
ஆடீர் ஊசல்"

மேலே சொல்லப்பட்ட இவ்வளவு அழகும் பொருந்த, கமல வீட்டின் அணங்கரசியுடன் குலவி தாமரையாகிய இல்லத்தில் மேவிய பெண்ணரசியுடன் - மங்கையர் திலகத்துடன் - தையல் நாயகியுடன் அணைந்து, ஊசல் ஆடீர் - ஊசல் ஆடுவீராக!

"அலங்கார மாயவரே ஆடீர் ஊசல்"

அழகான மாயம் வல்லவரே ஊசல் ஆடுக!

" மணங்கமழ் பூவையும் மயிலும், தமாலக்காடும்
வண்கிளியும், நீலவெற்பும் மடமான் கன்றும்,
இணங்குகட லும்துகிரும், காரும் மின்னும்,
யமுனையெனும் திருநதியும் எகினப் பேடும்,
கணங்குழைய கோசலைதே வகிய சோதை
கண்மணியும் பாவையும்போல் கமல வீட்டின்
அணங்கரசி யுடன்குலவி ஆடீர் ஊசல்!
அலங்கார மாயவரே ஆடீர் ஊசல்!"



## எம்மை ஆளுடை நாயகன் விருந்தினுக்கு இசைந்தான்.

பரந்தாமன் — காப்புக் கடவுள் — மூலமும் நடுவும் ஈறும் இல்லதோர் மும்மைத்தாய, காலமும் கணக்கும் நீத்தகாரணன் — மேலொரு பொருளும் இல்லா மெய்ப் பொருள் — தேவுமாய் மாநுடமாய் மற்றும் முற்றும் செப்புகின்ற பலகோடி சராசரங்கள், யாவுமாய் விளையாடும் ஆதிமூர்த்தி — பேருலகம் எல்லாம் விரிகமல உந்தியுடை விண்ணவன் — பார்த்தன் செல்வத் தேரேறு சாரதியா யமர்ந்தான் — தேனுடைக் கமலத் திருவினுக் கரசன் — திரைகொள்மா நெடுங்கடல் கிடந்த கண்ணன்,

> "சுரருடனே முனிவர்களும் சுருதிநான்கும்
> தேடுகின்ற பதம் சிவப்ப"த்

திருநாடு பெறுவதற்காக நூற்றுவர்பால் பாண்டவர்க்குத் தூது நடந்தான்.

> "பேராழி அறிதுயிலும் பெருமிதமும்
> உடன் மறந்து பிறந்த"

அம் மாயவன், தூது சென்ற அவ் அஸ்தினபுரியில் "ஞான கஞ்சுக விதுரன் வாழ் மனையில்" விருந்தினனானான். விதுரன் அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. அவன் பெற்ற பெருந் தவப் பேறு, அவனை யன்றி அவனியில் பிறந்

தவரில் யாரும் பெறவில்லை யென்று உணர்கின்றான் விதுரன்.

"எம்மையாளுடை நாயகன்
விருந்தினுக்கு இசைந்தான்" என்று

தனக்குத் தானே சொல்லிக்கொண்டு ஆனந்தக் கூத்தாடுகின்றான் அவ்வில் வீரன். கோபாலன் முகத்தைக் கூர்ந்து நோக்கினான்; எப்படி எந்தவகையாக அவனுக்கு முகமன்மொழிவது என்று விளங்கவில்லை; தேறி ஒருவாறு கூறுகின்றான் :—

'கண்ணா! நின் பாதத்தைத் தீண்ட என்னுடைய இக்குடில் என்ன பெரிய தவஞ் செய்ததோ? முன்னே நீ அறிதுயில் கொண்டருளிய பாற்கடலா என் சிறு வீடு? அல்லது காற்றடைத்த பட்டு மெத்தைபோல் சுகந்தரும் பாம்புப் படுக்கையா என் சிற்றில்? அன்றி ஞாலம் ஏழும் உண்டு ஓர் பாலகனாய் பள்ளி கொண்ட ஆலமா மரத்தின் இலையா என் இருக்கை? அன்றேல் அறம் வகுத்த நான் மறையின் கூட்டமா இக்குடில்?"

"முன்னமே துயின்றருளிய முதுபயோததியோ?
பன்னகாதிபப் பாயலோ? பச்சையால் இலையோ?
சொன்ன நால்வகைச் சுருதியோ? கருதிவேய்தற்கு
என்னமாதவம் செய்ததிச் சிறுகுடில் என்றான்"

விதுரனின் மகிழ்ச்சிப் பெருக்கு இங்கு கரைபுரண்டு ஓடுகின்றது. காரணம் அவன் கண்ணனை விருந்தினனாகப் பெற்றபாக்கியமே.

விதுரன் பெற்றது போன்ற ஒரு பெரும் பேற்றை நானும் பெற்றேன் என்பதைக் களிப்போடு இங்கு கூறுகின்றேன். உலகிற் பெரியார் - உலகம் தோன்றிய காலந் தொட்டு இன்று வரை உலகில் தோன்றிய எவரும் ஈடில்லை என்னுமாறு உயர்ந்தவர் — உலகம் வியக்கும் செயற்கரிய செய்கை பல செய்தவர்—அறவாழி அந்தணர்—கருணைக் கடல்—உண்மையே உருவெடுத்தவர்—எவ்வுயிர்க்கும் தீங்கு நினையாதவர்--உலகனைத்தும் ஓர் உயிர் என்று உணர்ந்த ஞானி—பொறி யடக்கி யாண்ட பெருந்தகை—காந்தி யடிகளை விருந்தினராகப் பெறும் பேற்றை நான் பெற்றேன். என் உள்ளக் கமலத்தே இடம் பெற்ற அத் திருப்பாத தூளி என் சிறு குடிலையும் புனித மாக்கியது.

"எம்மையாளுடை நாயகன்
விருந்தினுக்கு இசைந்தான்" என்று

என் உள்ளம் இன்பக் கடலாடியது. ஆனால் அது இன்று நேற்று நடந்த நிகழ்ச்சி யல்ல; நடந்து மாமாங்கம் ஒன்றுக்குமேல் ஆகின்றது. இதுவரை நான் அதை எழுத்தில் ஏற்றவில்லை. இன்னோரன்ன நிகழ்ச்சிகள் இறவாதவை; காலாவதி யில்லாதவை.

கவியரசர் பாரதிக்கும் தேசபக்தர் பலர்க்கும் ஒரு காலத்தில் அஞ்சேல் என்று அபயம் அளித்த புதுச்சேரியினின்றும் புதிதாகப் பிறக்கும் "பாரத சக்தி"க்கு — எனது அரிய

நண்பர் பானு என்னை இதுபற்றி எழுதித் தரு மாறு கேட்டார். புதுச்சேரியில் தவயோகத் தில் ஆழ்ந்து தமிழ்ப்பணி யாற்றும் சலியா உழைப்பினர்—சத்திய நெறியினர் — அன்பே வடிவினராகிய யோகி சுத்தானந்த பாரதியா ரின் கட்டளை, பாரத சக்திக்கு நான் இக் கட் டுரை எழுதவேண்டும் என்பது. எனவே, எம்மை யாளுடை நாயகன் விருந்தினுக்கு இசைந்த பழைய நிகழ்ச்சியை நினைவுக்குக் கொணரும்சந்தர்ப்பம் நல்கிய திருவருளை வணங் குகின்றேன். புத்திரி பாயின் அழகிய வயிற்றை யும் கஸ்தூரி அன்னையின் தோள்களையும் சபர்மதி நதி நீரையும் ஏர்வாடாச் சிறையையும் சிறியேன் உள்ளத்தையும் குளிரச் செய்த அம் மோகன வடிவத்தை மனக் கோயிலில் இருத்தி மகிழ்வோமாக!

ஏந்தல் இருந்தவப் புத்திரி பாயின் எழில்வயிறும்
தோய்ந்த துணைவிஎன் கஸ்தூரி அன்னைநல் தோளிணையும்
வாய்ந்த சபர்மதி நீரும்எர் வாடா மணிச்சிறையும்
பாய்ந்த எனதுள மும்குளிர் வித்த பனிவடிவே.



# காரைக்குடியில் பாரதியார்

முப்பது ஆண்டுகட்கு முன் திடீரென ஓர் நாள்; சிவந்த உடம்பு—மொட்டைத் தலை—முறுக்கிய எதிர்மீசை — குறு குறுத்த கண்கள் இவற்றோடு, கையில் தடியுடன் ஒரு கம்பீர உருவம் காரைக்குடியில் தோன்றியது. அவ் வடிவம் நம்மைவிட்டு மறைந்து இப்பொழுது இருபத்தேழு ஆண்டுகள் ஆகிவிட்டன. அதுதான் மகா கவி சுப்பிரமணிய பாரதியாரின் மேனி. காரைக்குடியில் மூன்று நாட்களே பாரதி யிருந்தார் என்பது என் நினைவு. அப்பொழுது காரைக்குடியில் ஹிந்து மதாபிமான சங்கம் நல்ல பணி செய்துகொண்டிருந்தது. அங்குதான் பாரதி தங்கியிருந்தார். அவரைச் சுற்றிலும் ஒரு சரியான நாட்டுப் பற்றுள்ள இளைஞர் கூட்டம் சூழ்ந்துகொண்டது. பாரதி, கூட ஒருவரை அழைத்து வந்திருந்தார். அவரும் ஒரு அரைப் பயித்தியம் மாதிரியே காணப்பட்டார். பாரதியாரோ ஒரு ஞானக் கிறுக்கர். இருவரும் நடந்துகொண்ட முறைகள் எங்கட்கு வேடிக்கையாகவே இருந்தன. பாரதி உடன் வந்தவரை 'மொட்டையா!' என்று அழைத்ததாக எனக்கு ஞாபகம். பாரதியை அவர் 'சுவாமி' என்றழைப்பார். நாங்கள் எல்லோருமே பாரதியை 'சுவாமி' என்றுதான் அழைக்க வேண்டும், அது அவர் கட்டளை.

பாரதியின் பாடல்களைப் படித்து அதில் திளைத்துப் போயிருந்த நாங்கள், பாரதியை நேரில் கண்டு விருந்தினராக்கிக் கொள்ளும் பேறு பெற்றதற்கு எல்லையற்ற மகிழ்ச்சி யடைந்து அவரை மிகவும் பாராட்டினோம். அந்த நாட்களில் நாங்கள் அவரை விட்டு அக லவே இல்லை. அப்பொழுது நாங்களெல்லாம் ஏறக்குறைய இருபது வயதினர்.

ஒருநாள் மாலை அவரை அழைத்துக் கொண்டு நாங்கள் பத்துப் பதினைந்து பேர் காரைக்குடியில் இப்போது 'நியூ டவுன்' என்று அழைக்கப்படும் ஒரு காட்டுப் பக்கம் நீண்ட தூரம் சென்று உலாவி வந்தோம். அந்நாள் அப் பகுதி நல்ல காடாக இருந்தது. அதற்கு வடகாடு என்று பெயர். பாரதியாரோடு கூட இருந்த நாட்களில் அவர் செய்யும் செயல் ஒவ் வொன்றிலும் நாங்கள் வீரத்தைக் கண்டோம். எழுந்து நடப்பாரானால் "ஏறுபோல் நட" என்று அவர் சொன்னபடி கோணாமல் வளை யாமல் நிமிர்ந்து சிம்மம் போலவே நடப்பார். ஒருநாள் ஓமப் பொடியை அள்ளிக் கையிலே வைத்துக்கொண்டார். மீசையை எதிராகத் தடவி விட்டுக்கொண்டு கையை முறுக்கிக் கொண்டு சண்டை போடுவதுபோல் பாவனை செய்து அவர் சாப்பிட்டமாதிரி புதுமையாகவே இருந்தது.

எங்களையெல்லாம் பாரதியார், 'பாண்டியா!' அல்லது 'தம்பி' என்று அன்போடு அழைப்

பார். 'தம்பி!' என்ற சொல் தமிழில் மிகச் சிறந்த ஒரு அன்புரிமைச் சொல். 'பாண்டியன்' என்பது ஒரு நாடு பற்றிவந்த சொல். அச்சொல்லில் பாரதிக்கு மிகவும் பிரியம். அவர் பாண்டி நாட்டாரல்லவா? நாங்களும் அந் நாட்டாராதலால் எங்களைப் பாண்டியா! என்று அழைப்பது பொருத்தந்தானே. பாண்டி நாட்டில் எல்லோருக்குமே ஒரு மயக்கந்தான். கடவுளுக்கு உறைவிடம் எது? எங்கும் அவர் இருக்கின்றாரானாலும் "தென் பாண்டி நாடே தெளி" என்று செப்புகின்றது திருவாசகம்.

பாரதியைப் படம்பிடிக்க விரும்பினோம். எதற்கும் அவரை இணக்குவது முடியாத காரியம். அவருக்கே மனம் வந்தால்தான். படம் பிடிக்க ஒப்புக்கொண்டார். வேண்டிய எல்லாம் தயார் செய்யப்பெற்றன. பாரதியாரை உட்கார வைத்தோம். ஒரு தடிக் கம்பைத் தூக்கிக் கையிலே தலைக்குமேலே கம்பு தோன்றும்படி நிறுத்திக்கொண்டார். அம்மாதிரிப் படம்பிடிக்கப் படம்பிடிப்போருக்குச் சம்மதமில்லை. அவர் எவ்வளவோ சொன்னார். 'முடியாது; நீ சொல்வதை நான் என்ன கேட்பது?' என்று சொல்லிவிட்டார் பாரதியார். பிறகு அப்படியே எடுக்கச் செய்தோம்.

பாரதி, அவருடைய பாட்டை மிக நன்றுகப் பாவத்தோடு பாடுவார். ஏதாவது ஒரு பாட்டின் பெயரைச் சொல்லி 'சுவாமி இதைப்

பாடவேண்டும்' என்று நாங்கள் கேட்போம். 'அது வேண்டாம், பழைய பாட்டு; புதுப்பாட்டு ஜமாய்க்கிறேன் : கேள், பாண்டியா!' எனச் சொல்லிவிட்டு நாங்கள் அறியாத அவருடைய புதுப்பாட்டிலே ஒன்றைப் பாடிக் காட்டுவார்.

"பிள்ளைப் பிராயத்திலே"

என்ற ஒரு பாட்டை மெதுவாகப் பாடிக் கொண்டே இருந்தார். நாங்கள் அமைதியாகக் கேட்டுக்கொண்டிருந்தோம். "அன்னை வடிவமடா!" என்று திடீரென ஓங்கி ஒரு கத்துக் கத்தினார். அதை நாங்கள் எதிர்பார்க்கவே இல்லையாதலின் அதிர்ச்சி தூக்கி வாரிப் போட்டு விட்டது. காதலும் வீரமும் மாறி மாறி வரும் ஒரு பாட்டு. அதை மிக நன்றாகப் பாடினார்.

"இள்ளைமொ ழிச்சிறு வள்ளியெ னும்பெயர்ச்
செவத்தை — என்றும்
கேடற்ற வாழ்வினை இன்ப விளக்கை
மருவினாய்!"

என்று பாடும்போது அப்படியே சொற்களைக் கொஞ்சி விடுவார்.

'கொள்ளைகொண் டேஅம ராவதி வாழ்வு
குலைத்தவன்—பானு
கோபன் தலைபத்துக் கோடி துணுக்குறக்
கோபித்தாய்!"

என்று சொல்லும்போது அந்தப் பானு கோபன் எதிரில் இருப்பதாகக் கருதிக் கொண்டு குமுறுகிறார்.

அவரோடு இருந்த சில நாட்களில் நாங்கள் பெற்ற உள்ளக் களிப்பு மிகுதி. மதுரைக்குப் புறப்பட வேண்டும் என்ருர். இன்னும் சில நாட்கள் தங்கிப் போகலாம் என்ருேம். கேட்க வில்லே. பிடிவாதமாகப் புறப்பட வேண்டு மென்று சொல்லிவிட்டார். அந்த நாளில் காரைக்குடியில் ரயில் இல்லே. அவரை அழைத்துக்கொண்டு நாங்கள் அனைவரும் கார் ஏற்றியனுப்பக் கல்லுக்கட்டிக்குச்சென்ருேம். அப்பொழுது கார்கள்புறப்படும் இடம் கல்லுக் கட்டியே. கார் புறப்படச் சிறிது நேரம் இருந்தது. அவரை, அணித்தேயுள்ள அன்பர் சொ. முருகப்பனுர்க்குச் சொந்தமான ஒரு கடையில் கூட்டிப் போய் வைத்துப் பேசிக் கொண்டிருந்தோம். பாரதியார் அங்கிருந்த மூன்று நாட்களிலும் எங்கள் நினைவுக்கு வராத ஒன்று அந்தச் சமயம் தோன்றியது.

‘சுவாமி! நமது சங்கத்தைப் பற்றிப் பாட வேண்டும்’ என்று கேட்டோம். ‘சரி, என்று ஆரம்பித்தார். பேனவை எடுத்து எழுதத் தொடங்கினர். கட கட வென்று எழுதிக் கொண்டே வந்தார். நாங்களெல்லாம் பார்த் துக் கொண்டுதான் இருந்தோம். இரண் டொரு அடிப்புக்கள் மட்டும் செய்தார். மற்றப் படி விரைவாகவே பாட்டைஎழுதினர். உடனே பாடக்கூடியவரை ஆசு கவி என்று கூறுவ துண்டு. பாரதி ஆசு கவியே ஆவார்.

பாரதி பாட்டுக்கள் எழுதிக்கொண்டிருந்த போதே கார் புறப்படப்போகும் செய்தி வந்தது. பாட்டை முடித்துவிட்டு அடுத்த காரில் புறப்படலாம் என்று எவ்வளவோ கெஞ்சினேம். முடியா தென்று எழுந்து விட்டார். புறப்பட்டுப் போய் மதுரையிலிருந்து பாட்டுக்களை முடித்து அனுப்புவதாகச் சொன்னர். நாங்கள் அதுவரை முடிந்த பாட்டுக்களையாவது தந்து போகும்படி வேண்டினேம். மறுத்து விட்டார். ஆனல் சொன்னபடி மதுரையிலிருந்து பாட்டுக்களை முடித்து அனுப்பி விட்டார்.

நல்ல பாடல்கள். அறுசீர் விருத்தங்கள். சில பாடல்களை இங்கே தருகின்றேன்.

"இத்தகைய துயர்நீக்கிக் கிருதயுகம்
 தனை, உலகில் இசைக்க வல்ல
புத்தமுதாம் இந்துமதப் பெருமைதனைப்
 பார்அறியப் புகட்டும் வண்ணம்
தத்துபுகழ் வளப்பாண்டி நாட்டினில்,கா
 ரைக்குடியூர் தனிலே சால
உத்தமராம் தனவணிகர் குலத்துதித்த
 இளைஞர்பலர் ஊக்கம் மிக்கார்!"

"உண்மையே தாரகம்என்று உணர்ந்திட்டார்;
 அன்பு ஒன்றே உறுதி என்பார்;
வண்மையே குலதர்மம் எனக்கொண்டார்;
 தொண்டு ஒன்றே வழியாகக் கண்டார்;

ஒண்மைஉயர் கடவுள்இடத்து அன்புடையார்;
அவ்வன்பின் ஊற்றத் தாலே,
திண்மையுறும் 'இந்துமத அபிமான
சங்கம்'ஒன்று சேர்த்திட் டாரே."

இவ் உலகத்துள்ள துயர்களையெல்லாம் நீக்கிக் கிரேதா யுகத்தைப் பூமியில் நிலைக்கச் செய்ய வல்ல புதிய அமிழ்தமாகிய இந்து மதத்தின் பெருமையை அவனி முழுதும் அறியப் பரப்பும் பொருட்டாக வலிமை மிக்க இந்துமதாபிமான சங்கத்தைக் கண்டார்கள். எங்கே? புகழ் திரு நடம் செய்கின்ற வளம் செறிந்த பாண்டியநாட்டிலேயுள்ள காரைக்குடி நகரத்தில். சங்கம் நிறுவியோர் யார்? மிகவும் பெருமை கொண்ட தனவணிக மரபிலே தோன்றிய பல இளைஞர்கள். அன்னார் ஊக்கம் மிகுந்தவர்; மெய்தான் தாரக மந்திரம் என்று உணர்ந்தவர்; அன்பு ஒன்றுதான் உறுதிப் பொருள் என்று கண்டவர்; கொடையையே குலத் தொழிலாகக் கொண்டவர்; தொண்டே நெறி என ஏற்றவர்; ஒளியும் சிறப்பும் மிக்க இறைவனிடத்திலே அன்புடையவர்; அவ்வன்புப் பெருக்குக் காரணமாக இச் சங்கத்தைக் கண்டனர்.

பாரதியார் பழகிய சில நாட்களில் அவர் கண்களால் கண்டவற்றை இவ்விரண்டு பாடல்களில் அப்படியே சித்தரித்துவிட்டார். சங்கத்தின் வேலைகளைச் சொல்லி, மனமார—வாயார

ஒரு அருமையான வாழ்த்துப் பாட்டைப் பாடி வாழ்த்துக் கூறினர் பாரதியார்.

"பலநூல்கள் பதிப்பித்தும் பல பெரியோர்
பிரசங்கம் பண்ணு வித்தும்
நலமுடைய கலாசாலை புத்தகசா
லைபலவும் நாட்டி யும்தம்
குலம்உயர—நகர்உயர—நாடுஉயர—
உழைக்கின்றார், கோடி மேன்மை
நிலவிடஇச் சங்கத்தார் பல்லூழி
வாழ்ந்தொளிர்க! நிலத்தின் மீதே."



## ஆசிரியரின் வேறு நூல்கள்

| | |
|---|---|
| திருவாசகத்தேன் .... | .... 2 8 0 |
| வருணகுலாதித்தன் மடல் .... | 1 8 0 |
| காந்தியும் வள்ளுவரும் | .... 1 8 0 |
| சேதுபதி விறலி விடு தூது .... | 2 8 0 |
| காதற் பாட்டு .... | .... 3 0 0 |
| வள்ளுவர் தந்த இன்பம் | .... 3 0 0 |
| குற்றால வளம் .... | .... 2 0 0 |
| காவேரி .... | .... 1 0 0 |
| காந்தி பாமாலை .... | .... 3 0 0 |
| தாலாட்டும் கும்மியும் | .... 0 4 0 |
| குளப்ப நாயக்கன் விறலி விடு தூது | (அச்சில்) |

சௌத் இந்தியா பிரஸ், காரைக்குடி.